# திருநபியின் திருமுடி

# مُوئے مُبارکُ




ஆசிரியர் :

மௌலானா மௌலவி அல்ஹாஜ்

**M.அப்துர் ரஸ்ஸாக் காதிரி ஸூஃபி**

# திருநபியின் திருமுடி

# موئے مبارک

یٰسٓ اختر مصباحی

ஆசிரியர் :

மௌலானா மௌலவி அல்ஹாஜ்
**M.அப்துர் ரஸ்ஸாக்** காதிரி ஸூபி
(இமாம், ஷாமியான் தைக்கால், ஆப்ரஹாம் பண்டிதர் ரோடு, தஞ்சை)

வெளியீடு :
**தர்ஹா வெளியீட்டகம்**
தஞ்சை.

# சிறு குறிப்பு

நூலின் பெயர் : திருநபியின் திருமுடி

மூலம் : உருது நூல் (மூவே முபாரக்)
ஆசிரியர்: யாஸீன் அக்தர் மிஸ்பாஹி

தமிழில் : மௌலவி
M.அப்துர் ரஸ்ஸாக் காதிரி ஸூபி
(இமாம், ஷாமியான் தைக்கால், ஆப்ரஹாம் பண்டிதர் ரோடு, தஞ்சை)

நூலின் நோக்கம் : புனிச்சின்னங்களைப் பற்றிய விளக்கம்

முதல் பதிப்பு : ரபியுல் அவ்வல் பிறை 12, ஹிஜ்ரி 1433
பிப்ரவரி2012)



நன்கொடை : ரூ.30/-

வெளியீடு : தர்ஹா வெளியீட்டகம்,
தஞ்சை.

புத்தகம் கிடைக்குமிடம்: ✆:04362-270786
74/176-A, முதல் மாடி,
ரெட்டை மஸ்தான் தர்ஹா எதிரில்,
காந்திஜி ரோடு, தஞ்சாவூர் - 613 001.

## பொருளடக்கம்

## முன்னுரை

نحمده و نصلى على رسوله الكريم

அல்லாஹ்வின் திருப்பெயரால் துவக்கம் செய்கிறேன். அவனுக்கே புகழ் அனைத்தும். மேலும் அவனது சங்கையான தூதரின் மீது சலவாத் கூறி.....

அருட்பெருஞ்ஜோதியாம் அண்ணல் எம்பிரான் ஸல்லல்லாஹுஅலைஹி வஸல்லம் அவர்களை ஏகன் அல்லாஹ் இப்பிரபஞ்சத்தின் ரஹ்மத் - அருட்கொடையாக, வான்வாழ், பூமிவாழ், முந்தியோர், பிந்தியோர், சிற்றெறும்பு முதல் ஜின்கள் வரை மனிதர் முதல் மலாயிக்கத்துகள் வரை அனைத்தின், அனைவரின் தகுதிமிகு தலைவராக பிழைகளை பொறுத்து, ரட்சித்து, கருணை காட்டி அகிலரட்சகன் அல்லாஹ்விடம் பரிந்துரை செய்து பாவமீட்சி பெற்றுத்தரும் வள்ளல் பெருமானாக வார்த்தையினால் அளவிடமுடியாத உள், வெளி பரிபூரணத்துவமுடைய காமில் ரசூலாக இப்புவிக்கு அனுப்பி வைத்தான். ஆயிரமாயிரம் கோடி புலவர்கள் ஒன்று கூடினாலும் அவர்கள் புகழை பாடிட முடியாது.

உயிரினும் மேலான நமது நாயகத்தின் மீது அன்பு வைப்பதுடன் அவர்களுடன் தொடர்புடைய எல்லா பொருள்களின்மீதும் அன்பு கொள்வது நபித்தோழர்களின் நடைமுறையும் உன்னத ஈமானும் ஆகும்.

தமிழகத்தில் பல்வேறு இடங்களில் சையது பரம்பரையைச் சார்ந்தவர்களிடத்தில் இன்றளவும் நபிகளாரின் புனிதத் திருமுடி பாதுகாப்பாகவும், கண்ணியத்துடனும் ரபியுல் அவ்வல் பிறை 12 அன்று பொது மக்களின் ஜியாரத்திற்கு காட்டப்படுகிறது. இதுகுறித்து வழிகெட்ட வஹ்ஹாபிகள் சர்ச்சைகளை ஏற்படுத்துவதுடன் அதனை அவமரியாதை செய்து ஈமான் கொண்ட முஃமீன்களை குழப்பத்தில் ஆக்க முனைகின்றனர்.

இந்த வழிகெட்ட வஹ்ஹாபியக் கூட்டமான தப்லீக் ஜமாத், தேவ்பந்தி, தவ்ஹீத் ஜமாத், அஹ்லே குர்ஆன், அஹ்லே ஹதீஸ், ஜமாத்தே இஸ்லாமி போன்ற இன்ன பிற வழிகேடர்களுக்கு நாம் பதில்சொல்லும் நோக்கில் இதை எழுதிடவில்லை. காரணம் பிடிவாதம் பிடித்த வழிகேடர்கள் குருடர்கள். எத்தனை ஹதீஸ்களை கூறினாலும் ஏற்கப்போவதில்லை.

ஈமான் கொண்ட முஃமீன்கள் இதயம் சாந்தி பெறவே உருது மொழியில் வெளிவந்த மூவேமுபாரக் (ஆசிரியர். யாஸீன் அக்தர் மிஸ்பாகி) என்ற நூலினை தமிழில் வெளியிடுகிறோம். இதன் மூலம் நமது ஈமானை அல்லாஹ் பாதுகாப்பானாக! ஆமீன். வஸ்ஸலாம்.

– ஆசிரியர்

## நன்றி நவிழல்

"மூவே முபாரக்" என்ற உருது நூலை தமிழாக்கம் செய்யும் நோக்கோடு தஞ்சையில் வாழையடி வாழையாய் பாரம்பரிய ரீதியாக நபிகளாரின் புனிதத் திருமுடியை பாதுகாக்க மராட்டிய மன்னர்களால் ஆசார் தைக்கால் என்ற மண்டபத்தை நிறுவி ஒவ்வொரு ஆண்டும் மௌலிது மீலாது மாதத்தில் 12 நாட்களும் மௌலிதை மிக விமரிசையாக பிறை 12 அன்று திருநபியின் திவ்விய தரிசனம் வழமையாக செய்து வரும் செய்யது வம்சத்தை சார்ந்த சையது ஷாஹ் நிஹ்மத்துல்லாஹ் சக்காப் தாஸிம் தரக் காதிரி என்கிற சையது முயீன் அஹ்மத் சக்காப் சஜ்ஜாதே நிஸீன் & டிரஸ்டி ஷாமியான் தைக்கால் (இரட்டை மஸ்தான் தர்ஹா) அவர்களை அணுகியபோது நூல் வெளியிட ஆர்வப்படுத்தியதோடு அதற்கான முழு பொறுப்பையும் ஏற்றுக்கொண்டதற்காகவும்,

உருது மூல நூலிலிருந்து தர்ஜமா என்ற மொழியாக்கம் செய்து அச்சுப் பொறுப்பையும் ஏற்றுக்கொண்டு அச்சிட்டு நமது கைகளில் சங்கையும் போற்றுதலுக்கும் உரிய நூலாய் தவழச் செய்த மௌலானா மௌலவி எம். அப்துர் ரஸ்ஸாக் காதிரி ஸூபி அவர்களுக்கும் நன்றி கூறும் அதே வேளையில் இதுபோன்ற நூல்கள் வெளிவர சுன்னத் வல் ஜமாத் அகீதா கொண்ட எல்லோரும் ஹதியா கொடுத்து வாங்கிப் படித்து தங்கள் ஈமானை திடப்படுத்திக் கொள்ளும் அனைவருக்கும் இதனை காணிக்கையாக்குகிறோம்.

-தர்ஹா வெளியீட்டகம்



## நேசத்திற்கு எல்லையில்லை

இஸ்லாமிய சன்மார்க்கம் வெறும் வார்த்தை ஜாலங்களால் வளர்ந்த மார்க்கமல்ல. இஸ்லாத்தை ஏற்கும் முன் புனித சஹாபாபெருமக்கள் நாயகத்தின் உண்மை, நேர்மை, புத்திகூர்மை, இறையச்சம், செம்மை, நேர்த்தி, நன்நடத்தை, பண்பு, ஒழுக்கம் போன்ற ஒவ்வொன்றையும் நன்கறிந்து கொண்ட பின்னரே "நம்மை பரிபூரணப்படுத்தும் இம்மார்க்கமே நன்மார்க்கம்" என இஸ்லாத்தில் இணைந்தார்கள்.

ஒரு தலைவரை எவ்வாறு தேர்வு செய்ய வேண்டுமென்பதற்கும், அத்தலைவரை எப்படிப் பின்பற்ற வேண்டுமென்பதற்கும், அத்தலைவருக்கு எவ்வளவு சங்கை செய்ய வேண்டுமென்பதற்கும் அத்தலைவருக்கு எந்தளவு கட்டுப்பட வேண்டுமென்பதற்கும் சஹாபிகளே மிகச்சிறந்த முன் உதாரணம் அதனால்தான் பெருமானாரின் வார்த்தைகளுக்கு மட்டுமல்ல, கண் அசைவிற்கும் தம் இன்னுயிரையும் துச்சமாக தியாகிக்கத் துணிந்தார்கள்.

உதாரணத்திற்கு பத்ர் வரலாறே பிரமித்துப் பதிவு செய்யும் வரலாற்றுச் சரித்திரம்.

"யாரசூலல்லாஹ்! நபியே! நாயகமே!"வேதமுடையோரென சொல்லிக் கொண்டு தம் நபி மூஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களிடம் "நீங்களும் உமது ரப்பும் போர் செய்யுங்கள் என தம் நபியை விட்டு விட்டு ஓடிய யூத சமுதாயத்தைப் போல் எங்களை எண்ண வேண்டாம். தங்களுக்கு முன்னாலும், பின்னாலும், வலதும், இடதும் தங்களை சூழ இருந்து எதிரிகள் தங்களை நெருங்கவிடாது எங்கள் இன்னுயிர் தந்து காப்போம்."

எதிரிகள் மூன்று மடங்கு அதிகமாகவும், அவர்களிடம் ஆயுதங்களும் மிகுதமாகவும் இருந்த போது சஹாபாக்கள் சொன்ன வார்த்தைகள் இவை. ஏன்? எதிரிகள் மூவாயிரம் மடங்கு அதிகமாய் இருந்தாலும் அவர்கள் அப்படித்தான் சொல்லியிருப்பார்கள். சும்மாவா! சொன்னது அல்குர்ஆன் அவர்கள் ஹிஸ்புல்லாஹ் - அல்லாஹ்வின் படை என்று!

நபித்தோழர்கள் நாயகத்துடன் நடந்து கொண்ட விதம் வரலாறு இதுவரை காணாத ஒன்று. எம்பொருமானார் சபையில் உரை நிகழ்த்த துவங்கினால், அப்படியே சிலையாக அமர்ந்திருந்து

நாயகத்தின் வார்த்தைகளை கவனமாக கேட்டுக்கொண்டிருப்பார்கள். இதனை வரலாற்று ஆசிரியர்கள் இப்படி பதிவு செய்கிறார்கள்.

"அவர்களது தலையில் பறவைகள் அமர்ந்திருப்பதுபோல் (ஆடாது அசையாது) இருப்பார்கள்".

"நாயகத்தின் மீது தமது இன்னுயிரைக் காட்டிலும் பிரியங் கொள்வதே ஈமானாகும்" என குர்ஆன், ஹதீஸ் கூறுகிறதே அதை சஹாபாக்களைக் கண்டு அறிந்தே உணர்ந்து கொள்ள முடியும்.

பொதுவாகவே நாயகத் தோழர்கள் எம் பெருமானார் ஸல்லல்லாஹு அலைவஸல்லம் அவர்களைப் பற்றி பேசத் துவங்கினால் அவர்கள் காட்டும் பேணுதல், மரியாதை, அன்பெல்லாம் நம்மை வியப்பிலாழ்த்தும்.

எம் பெருமானாரின் நேசமே ஈமானின் உயிர் என்பதை புரிந்து கொண்டதால் சஹாபாக்கள் எம் பெருமானாரைப் போல் இல்லை எம்பெருமானாரைத் தவிர வேறு எதையும் நேசிக்கவில்லை. இவ்வுலகில் அப்படியே மற்றதை நேசித்தாலும் அதை நாயகம் நேசிக்கிறார்கள் என்பதற்காகத்தான் நேசித்தார்கள்.

அவ்வாறே, அவர்கள் நாயகத்தின் மீது கொண்ட அளப்பரிய பிரியத்தின் எல்லை எல்லையற்றது. நாயகத்தின் மீதான பிரியம், நாயகம் நேசித்தவர்கள் மீதான, நேசித்தவற்றின் மீதான பிரியம், அவர்களுடன் சம்பந்தப்பட்ட ஒவ்வொன்றின் மீதும் அளப்பரிய அன்பும், சங்கையும் கொண்டிருந்தனர். இதை ஹதீஸ் கிதாபுகளின் அவர்களது வரலாறுகளின் ஒவ்வொரு பக்கமும் உணர்த்துகின்றன.

## சங்கைக்காக முத்தமிடல்

இமாம் முஹம்மத் பின் இஸ்மாயில் புகாரி (பிறப்பு ஹிஜ்ரி 194 - மறைவு ஹிஜ்ரி 256) ரஹ்மத்துல்லாஹி அலைஹி பதிவு செய்கிறார்கள்.

عن عائشة ام المؤمنين قالت مارأيت احدا كان اشبه حديثا وكلا ما برسول الله صلى الله عليه وسلم من فاطمة وكانت اذا دخلت عليه قام اليها فرحب بها وقبلها واجلسها فى مجلسه وكان اذا دخل عليها قامت اليه فاخذت بيده وقبلته واجلسته فى مجلسها . فدخلت عليه فى مرضه الذى توفى فرحب بها وقبلها (ص ١٤٣ - باب الرجل ابنته الادب المفرد مطبوعه بمبئی)

உம்முல் முஃமினீன் அன்னை ஆயிஷா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் கூறுகிறார்கள். "பாத்திமா ரலியல்லாஹு அன்ஹா அவர்களைப்போல நாயகத்திடம் மிக நெருக்கமாக நேசிக்கக் கூடிய ஒருவரையும் நான் கண்டதில்லை. பாத்திமா ரலியல்லாஹு அன்ஹா எப்போது நாயகத்தை சந்திக்க வந்தாலும் எம்பெருமானார் அவர்கள் எழுந்து அவர்களை அன்புடன் வரவேற்று, பாசத்துடன் முத்தமிட்டு தனது இடத்தில் அமர வைப்பார்கள். அவ்வாறே நபிகளார் ஃபாத்திமா ரலியல்லாஹு அன்ஹா அவர்களை சந்திக்கச் சென்றாலும் அவர்கள் நபியவர்களை அன்பொழுக வரவேற்று, பாசத்தோடு அண்ணலாரின் கரங்களை முத்தமிட்டு தமது இடத்தில் அமரச் செய்வார்கள். நாயகமவர்கள் தமது இறுதிக்கால இயலாமை - நோய் - நேரத்திலும் இவ்வாறே அன்புடன் வரவேற்று பாத்திமா ரலியல்லாஹு அன்ஹா அவர்களை பாசத்தோடு முத்தமிட்டார்கள் (புஹாரி பக்கம் - 143)

இதை தந்தை மகள் பாசத்தின் அடிப்படையில் அமைந்ததாக மட்டும் கருதக்கூடாது. எனவே தான் இமாமவர்கள் இதை ஒட்டி இன்னொரு ரிவாயத்தையும் பதிவு செய்கிறார்கள். فقبلنايده (الادب المفرد
அதில் ஹஜ்ரத் அப்துல்லாஹ் இப்னு உமர் ரலியல்லாஹு அன்ஹுமா ஒரு போரிலிருந்து திரும்பி வந்த போது நாயகத்தை சந்தித்து முகமன் கூறி சங்கை செய்யும் விதமாக அன்னாரின் கரங்களில் முத்தமிட்டார்கள்.

مررنا بل الربذة فقيل لنا هٰهُنا سلمة بن الاكوع فاتيناه فسلمنا عليه فاخرج يديه فقال بايعت بها تين نبى الله صلى الله عليه وسلم
فاخرج كفاله ضخمة كانها كف بعير فقمنا اليها فقبلناها (ص١٤٤-باب تقبيل اليد-الادب المفرد للامام البخارى)

அப்துர்ரஹ்மான் பின் ரஜீ ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் அறிவிக்கின்றார்கள். "நாங்கள் ரபதா என்னுமிடத்தை அடைந்த போது அங்கு சலமா பின் அக்வஃ ரலியல்லாஹு அன்ஹு இருப்பதாகக் கேள்விப்பட்டு அவர்களைச் சென்று சந்தித்த போது அவர்கள் முகமன் கூறி வரவேற்று தனது கைகளை காட்டி நான் இக்கரத்தால் தான் நாயகத்திடம் பைஅத் செய்து கொடுத்தேன் எனக் கூறியபோது அக்கரத்தை நாங்கள் முத்தமிட்டோம்".

இதே அறிவிப்பு தபகாத் இப்னு சயீதில் அப்துர்ரஹ்மான் பின் ஜைத் ரலியல்லாஹு அன்ஹு மூலம் அறிவிக்கப்பட்டுள்ளது.

قال ثابت لانس أمسست النّبى صلى الله عليه وسلم قال نعم فقبلها (حواله مذكوره)

ஹஜ்ரத் இப்னு ஐத்ஆன் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் அறிவிக்கிறார்கள். ஹஜ்ரத் சாபித் ரஹ்மத்துல்லாஹி அலைஹி ஹஜ்ரத் அனஸ் ரலியல்லாஹு அன்ஹுவிடம் கேட்கிறார்கள். நீங்கள் நாயகத்தின் கரத்துடன் கரம் சேர்த்துள்ளீர்களா? அதற்கு அனஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் "ஆம் நாங்கள் நாயகத்தின் புனித கரத்தை முத்தமிடவும் செய்தோம்" என்றார்கள்.

دخلنا على يذيد بن الاسود عائدين فدخل عليه واثلة بن الاسقع رضى الله عنه فلما نظراليه مد يده فاخذ يده فمسح بها وجهه وصدره لانه بايع رسول الله صلى الله عليه وسلم (رواه ابو نعيم فى الحلية-ج:٩)

ஹஜ்ரத் யூனுஸ் பின் முயஸ்ஸரா ரலியல்லாஹு அன்ஹு கூறுவதாக அபூநயீம் ரலியல்லாஹு அன்ஹு கூறுகின்றார்கள் "நாங்கள் யஜீத் பின் அஸ்வத் ரலியல்லாஹு அன்ஹு அவர்களை நலம் விசாரிக்கச் சென்றோம். அதே சமயம் அவர்களைக் காண வாஸிலா பின் அஸ்கஃ ரலியல்லாஹு அன்ஹு வந்தார்கள். அவர்களைக் கண்டதும் யஜீத் பின் அஸ்வத் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் தனது கைகளை நீட்ட அதனை வாஸிலா பின் அஸ்கஃ ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் தனது முகத்திலும், நெஞ்சிலும் ஒற்றிக் கொண்டார்கள். ஏனெனில் வாஸிலா ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் தனது கரத்தை நாயகத்தின் திருக்கரத்தோடு வைத்து பைஅத் செய்து கொடுத்தார்கள்.

காஜி அபுல் ஃபழ்ல் இயால்பின் மூஸா மாலிக் (ஹிஜ்ரி 476-ஹிஜ்ரி 544) அவர்கள் எழுதுகிறார்கள்.

ورؤى ابن عمرواضعا يده على مقعد النبى صلى الله عليه وسلم من المنبرثم وضعها على وجهه (ص٤٤ ج ٢ الشفاء بتعريف حقوق المصطفى مطبوعہ بمبئی)

ஹஜ்ரத் இப்னு உமர் ரலியல்லாஹு அன்ஹு நாயகத்தின் மிம்பரை தமது கைகளால் தொட்டு முத்தமிட்டதை மக்கள் பலரும் பார்த்துள்ளார்கள். (அஷ்ஷிபா - பாகம்-2 பக்கம் 44)

ஹஜ்ரத் அபூ மஹ்தூரா ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் நெற்றியின் சில முடிகள் பூமியில் படுமளவு நீண்டு வளர்ந்திருந்தன. அச்சில முடிகளை மட்டும் வெட்டவே மாட்டார்கள். மக்கள் அதை வெட்டினாலென்ன? எனக் கேட்டால்... அது நாயகம் எம்பெருமானாரால் அன்போடு தம் கரத்தால் தடவிய முடிகள் என்பார்கள்.

(பைஹகீ, தாரகுத்னி, அஹ்மத், இப்னுஹிப்பான், ஷிபா)

பாருங்கள்! சஹாபாப் பெருமக்கள் பெருமானார் மீது கொண்டிருந்த அளப்பரிய நேசத்தை. வார்த்தைகளால் விவரித்துவிட முடியாதது அது. மேலும் பெருமானாரின் திருக்கரங்கள் மட்டுமல்ல அவர்களது கரம்பட்ட பரக்கத்மிக்கதான ஒவ்வொன்றையும் அவர்கள் அளவு கடந்து நேசித்துள்ளார்கள்.

சஹாபாக்கள் எம்பிரான் திருக்கரத்தை மட்டுமல்லாது, திருக்கரம்பட்ட முபாரக்கான வஸ்துக்களையும் (பொருள்களையும்) தங்களது இதழ்களாலும், நெஞ்சத்தாலும் ஒற்றிக் கொள்வார்கள்.

இன்னும் நாயகம் ரசூல்கரீம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அன்னவர்களை அவர்கள் ஒருபோதும் பெயர் சொல்லி கூப்பிட்டதில்லை. யாரசூலல்லாஹ்! அல்லாஹ்வின் தூதரே! யா நபியல்லாஹ்! அல்லாஹ்வின் நபியே, யா ஹபீபல்லாஹ்! அல்லாஹ்வின் நேசத்திற்குரிய நாயகமே என்றே அழைப்பார்கள்.

மேலும் நாயகத்திடம் பேச முனையும் போது "ஃபிதாக அபீ, வ உம்மீ" என் தாயும், தந்தையும் தங்களுக்கு அர்பணம் என்று கூறியே பேசத் துவங்குவார்கள்.

நாயகத்தின் திருநாமம் மொழியப்பட்டால் சங்கையோடு சலவாத் கூறுவார்கள். அன்னாரைப் பற்றி பேசினால் மட்டுமல்ல அண்ணலாரின் பெயரைக் கூறினாலோ, கேட்டாலோ கூட அவர்களது உள்ளங்கனிந்து நாதமுதமுழுத்து கண்ணீர் சுரந்துவிடும்.

நாயகத்தின் திருக்கரம் மட்டுமா? புனித பாதம் பட்ட மண்ணையுமல்லவா அல்லாஹ் சங்கை செய்தான்.

لَآ أُقْسِمُ بِهَاذَالْبَلَدِ﴿١﴾ وَأَنْتَ حِلٌّ بِهٰذَالْبَلَد﴿٢﴾ (سورة بلد آيت ١-٢)

நபியே நாயகமே (உங்கள் பாதம்பட்ட) நீர்வசிக்கும் நகரின் மீதாணை.

எனவே தான் ஹழ்ரத் உமர் ஃபாரூக் ரலியல்லாஹு அன்ஹு கூறினர்கள். "யாரசூலல்லாஹ்! தாங்களின் மகத்துவம் என்னே! அல்லாஹ் தங்களின் பாதம்பட்ட பூமியையும் அல்லவா பரகத் செய்து கண்ணியப்படுத்தியுள்ளான்".

ما بين بيتى و منبرى روضة من رياض الجنة (بخارى و مسلم)

நாயகம் நவின்றார்கள். எனது மிம்பருக்கும். இல்லத்துக்கும் இடைப்பட்ட பூமி சுவனத்தின் ஒரு பகுதி. (புகாரி, முஸ்லிம்)

ان منبرى على ترعة من ترع الجنه (الحديث)

எனது மிம்பர் சுவனப் பூங்கா என்றொரு ஹதீசும்,

منبرى على حوضى (بخارى)

என் மிம்பர் எனது ஹவ்ழ் - நீர்த்தடாகம் - மீதுள்ளது (புகாரி) என்றொரு ஹதீசும் வந்துள்ளது. நினைவுகூறத்தக்கது.

## சிறந்தது மக்காவா... மதீனாவா...

ஹழ்ரத் அப்துல்ஹக் முஹத்திஸ் தெஹ்லவி ரஹ்மத்துல்லாஹி அலைஹி (ஹி 958 - ஹி 1052) புனித ஹரமைன் ஷரீஃபைன் குறித்து எழுதுகிறார்கள். "பொதுவாக இறைஇல்லம் கஃபா உட்பட மக்காநகரை விட நாயகத்தின் வாசஸ்தலமான ரவ்ழா சிறப்பு வாய்ந்தது. நாயகத்தின் ரவ்ழாவைத் தவிர்த்துப்பார்க்கும் போது இறைஇல்லமான கஃபா சிறப்புவாய்ந்ததாக திகழ்கிறது. இறைஇல்லம், ரவ்ழா தவிர்த்து மக்காவும், மதினாவும் சிலரிடம் சமநிகர் அந்தஸ்துள்ளதாகவே கருதப்படுகிறது. சிலர் மக்கா ஏற்றமிக்கதென்றும், சிலர் மதீனா ஏற்றமானதென்றும் கருதுகின்றனர்". (ஜத்புல்குலூப் பக்14)

المدينة خير من مكّة

இமாம் தப்ரானி முஃஜிம் கபீரில் ராஃபிஃ பின் குதைஜ் ரலியல்லாஹு அன்ஹுவின் ரிவாயத்தை பதிவு செய்கின்றார்கள். நாயகம் கூறுகின்றார்கள். "மதீனா ஷரீஃப், மக்கா ஷரீஃபைவிட ஏற்றமிக்கதாகும்".

இமாம் மாலிக் ரஹ்மத்துல்லாஹ் முஅத்தாவில் பதிவு செய்யும் நிகழ்ச்சி. ஹஜ்ரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு ஹஜ்ரத் அப்துல்லாஹிப்னு அப்பாஸ் மக்ஜூமி ரலியல்லாஹு அன்ஹு அவர்களிடம் வினவினார்கள். "மக்கா, மதீனா இரண்டில் எது மேன்மையானது?" அதற்கவர்கள் "மக்காவால் தான் அதை அபயம்பெற்றதாக ஆக்கியுள்ளான்" என்றனர். அப்போது உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் குறுக்கிட்டு நான் ஹரம் பற்றி, கஃபா பற்றி கேட்கவில்லை. அஃதன்றி பொதுவாக மக்கா, மதீனாவில் எதன் சிறப்பு மேன்மை? என்றுதான் கேட்கிறேன். இப்படியே பேசிக் கொண்டிருந்து விட்டு ஹஜ்ரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு சென்றுவிட்டனர் (ஜத்புல்குலூப் பக் 18)

அதனால் தான் ஹஜருல் அஸ்வதை நோக்கி ஹஜ்ரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு இப்படிச் சொன்னார்கள். "கல்லே! உன்னை

எங்கள் நபிகளார் முத்தமிட்டார்கள். அதனால் தான் நானும் அவ்வாறு செய்து சங்கை செய்கிறேன். இல்லாவிட்டால் இந்த உமரிடம் உனக்கு என்ன சிறப்புண்டு?"

உமர் ரலியல்லாஹு அன்ஹு போலத்தான் ஏனைய சஹாபாக்களும், சஹாபாக்கள் போல தாபிஈன்கள், தாபிஈன்களை ஒட்டி தபஃதாபியீன்களும் அவர்களில் உள்ள இமாம் பெருமக்களும், அவர்களைப் பின்பற்றிய உலமாக்களும் அதாவது அஹ்லுஸ் சுன்னத் வல்ஜமாஅத்தின் அனைவரும் தங்களது இதயங்களில் நாயகத்தின் சங்கையை உயிருக்கு மேலாக கொண்டதுபோல், நாயகத்தோடு சம்பந்தப்பட்ட, எம்பிரான் தொட்ட, தடவிய, முத்தமிட்ட, சங்கைபடுத்திய அனைத்தையும் நேசித்தனர், நேசித்து வருகின்றனர்.

## சந்தேகம் கூடாது

காழி இயாழ் ரஹ்மத்துல்லாஹி அலைஹி (வபாத் ஹி 544) குறிப்பிடுகிறார்கள்.

وَمن اعظامه واكباره اعظامُ جميع اسبابه واكرام مشاهده وامكنته من مكّة والمدينة ومعاهده. ومالمسه صلى الله عليه وسلم او عرف به۔ (ص۲۲ ج۲ شفاء)

"நாயகம் எம்பிரானோடு சம்பந்தப்பட்ட ஆசார் எனப்படும் சின்னங்களானாலும், பரக்கத்மிக்க எப்பொருளாயினும், அது எவ்வகையில் தொடர்புள்ளதாக இருந்தாலும் அதை சங்கை செய்ய வேண்டியது அவசியமாகும். இதுவே சலஃபீன்கள் எனப்படும் சஹாபாக்கள், தாபிஈன்கள், தபஃதாபியீன்கள் வழமையாகும்".

பொதுவாக மேற்குறிப்பிட்ட சின்னங்களோ, மற்றவையோ வரலாற்று ஆதாரத்தோடு உள்ளபோது ஏற்க்கப்படுகிறது. ஆனால் சில வரலாற்றாதாரம் இல்லையென குறைத்து மதிப்பிடப்படுவது ஏற்புடையதன்று. ஏனெனில் எந்த ஒரு முஸ்லிமும் எந்த ஒன்றையும் காரணமின்றி அல்லது தவறான முறையில் சம்பந்தப்படுத்தமாட்டார். ஆனால், அதன் வரலாறு பல காரணங்களால் பாதுகாக்கப்படாமல் போயிருக்கலாம். ஆகவே, அவற்றை யூகத்தின் அடிப்படையில் அவமதிப்புச் செய்யவோ, சங்கை செய்யாது புறக்கணித்திடவோ கூடாது. யூனுஸ் சூராவில் அல்லாஹ் கூறுகிறான்.

انَّ الظَّنَّ لَا يُغْنِىْ مِنَ الحَق شَيْئًا (سورة يونس آيت ٣٦)

"நிச்சயமாக யூகிப்பது உண்மையைப் பற்றிய எப்பயனும் தராது".

يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا اجْتَنِبُوا كَثِيرًا مِّنَ الظَّنِّ إِنَّ بَعْضَ الظَّنِّ إِثْمٌ (سورة حجرات - آيت ١٢)

"முஃமின்களே! சந்தேக எண்ணங்களை தவிர்ப்பீர். நிச்சயமாக அவற்றில் சில பாவமாகும்.

நாயகமும் யூக, சந்தேக எண்ணங்களை தவிர்க்கும்படி கட்டளையிட்டுள்ளார்கள்".

اياكم و الظّنّ فانّ الظن اكذب الحديث۔

"சந்தேக யூக எண்ணங்களை தவிர்ந்து கொள்வீர் ஏனெனில் அது பெரும் பொய் ஆகும்".

அதே சமயத்தில் நாயகத்துடன் சம்பந்தப்பட்டதாக எந்த ஒன்றையும் பொய்யுரைப்பதையும் கடுமையாக எச்சரிக்கின்றார்கள்.

من كذب علىّ متعمداً فليتبوا مقعده من النار۔ (الحديث)

"என்மீது வேண்டுமென்றே பொய் கூறியவன் தனது இடத்தை நரகமாக்கிக் கொள்ளட்டும்".

ஒருவன் நாயகத்துடன் சம்பந்தப்பட்டதாக ஒன்றை பொய்யாகக் கூறினால் அதன் பாவத்தை அவன் பெற்றுக் கொள்வான். அதே சமயம் ஒருவன் உண்மை கூறி அது பொய்யாக இருக்குமோ என்று நாம் சந்தேகங்கொண்டுவிட்டால் அல்லாஹ், ரசூலின் எச்சரிக்கை நமக்குத்தான்.

وَإِن يَكُ كَاذِبًا فَعَلَيْهِ كَذِبُهُ ۔ وَإِن يَكُ صَادِقًا يُصِبْكُم بَعْضُ الَّذِي يَعِدُكُمْ (سورة مومن ۔ آيت ٣٨)

அல்லாஹ் கூறுகிறான். அவர் பொய்யரெனில் அது அவரின் மீதே (கேடாக) ஆகும். அவர் உண்மையாளராக இருந்துவிட்டால் உங்களுக்கு அவர் வாக்களிக்கும் (வேதனைகளில் சிலவும் உங்களுக்கு நேர்ந்து விடும்.)

ஆகவே உலகில் எங்கு எதை நாயகத்தோடு சம்பந்தப்பட்டது எனக் கூறப்பட்டாலும் அவற்றை முழுமனதோடு சங்கை செய்யவேண்டியது நமது கடமையாகும். மேலும் ஒரு முஃமீன் ஈருலகிலும் ஈடேற்றம் பெறக் காரணமாகவும் அமையும். இதுவே அஹ்லுஸ் சுன்னத் வல்ஜமாஅத்தினரின் அகீதா - கொள்கை - ஆகும்.

மௌலானா நூருத்தீன் அப்துர் ரஹ்மான் ஜாமீ (ஹி 816 - ஹி 898) எழுதுகிறார்கள். "நாயகம் முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அன்னவர்கள் ஹ"ஜ்ஜதுல்வதாவில் தமது புனித சிரசில் முடிகளை மழித்து அவற்றை ஒரு பசும் மரத்தின் கீழ் வைத்தார்கள். உடனே ஸஹாபாக்கள் ஆர்வமாக அதனை போட்டி போட்டுக் கொண்டு எடுத்தார்கள்". ஹஸ்ரத் உம்மு அம்மார் ரலியல்லாஹு" அன்ஹா" அவர்கள் கூறுகின்றார்கள். "நானும் சில முடிகளை எடுத்துக் கொண்டேன். எம்பிரானின் வஃபாத்திற்குப் பின் யாராவது நோயுற்றால் நான் பரக்கத்மிக்க பெருமானாரின் முடிகளை தண்ணீரில் நனைத்து எடுத்து அத்தண்ணீரை நோயாளிக்கு குடிக்கக் கொடுப்பேன். அல்லாஹ்வின் கிருபையால் அவருக்கு நலம் உண்டாகிவிடும்".

(ஷவாஹிதுன் நுபுவ்வத்)

ஹழ்ரத் உமர்பின் அப்துல் அஜீஸ் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களைப் பற்றி அபூ அப்துல்லாஹ் முஹம்மத் பின் சஃத் ஜுஹ்ரீ ரஹ்மத்துல்லாஹி அலைஹி (ஹி 168 - 230) எழுதியுள்ளார்கள். உமர் பின் அப்துல் அஜீஸ் அவர்கள் மரணத் தருவாயில் எனது கஃபனுடன் நாயகத்தின் நகத் துண்டையும், புனித முடியையும் வையுங்கள். என வசிய்யத் செய்துவிட்டு மரணித்தார்கள். அவ்வாறே அவற்றை அவர்களது கஃபனுடன் வைக்கப்பட்டது. (தபகாத் இப்னு சயீத், பாகம் 5)

அண்ணலோடு சம்பந்தப்பட்ட ஒவ்வொன்றும் ஈருகை ஈடேற்றத்திற்கும் ரஹ்மத்திற்கும், பரக்கத்திற்கும், இறைப்பொருத்தத்திற்கும், பாவமன்னிப்பிற்கும் வழிகோலக் கூடியதாகும் என்பதில் ஐயமில்லை.

## இறைச்சின்னங்களின் மேன்மையும், பரக்கத்தும்... (குர்ஆனின் பார்வையில்)

அகில ரட்சகன் அல்லாஹுத்தஆலா எவ்விஷயங்களை வஸ்துக்களை, கிரியைகளை, ஸ்தலங்களை மரியாதை செய்யும்படி கட்டளையிட்டிருக்கிறானோ அவை சங்கைக்குரியதாகவும், இறைச்சின்னங்களாகவும் போற்றப்படுகின்றன. அவை அல்லாஹ்வின் அத்தாட்சிகள். அவற்றோடு பொருந்தி அமல் செய்யும்போதே ஈமானின் சுவையை உணர முடியும். அவை முஃமினின் ஈமானின் அந்தஸ்தை உயர்த்தக் கூடியதாக உள்ளன.

கஃபாவை தவாஃப் செய்வது மற்றும் ஹஜ் கிரியைகளை நிறைவேற்றுவதைப்பற்றி அல்லாஹ் கூறுகிறான்.

ذٰلِکَ وَمَنْ يُعَظِّمْ حُرُمٰتِ اللّٰهِ فَهُوَ خَيْرٌ لَّهٗ عِنْدَ رَبِّهٖ ۔ (سورة حج آيت ۔ ٣٠)

“இதுவே (ஹஜ்ஜின் முறையாகும்) இன்னும் எவர் அல்லாஹ்வினால் புனிதமாக்கப்பட்டவற்றை கண்ணியப்படுத்துகிறாரோ அது அவருக்கு அவருடைய ரப்பிடம் மிக நல்லதாகும்”.

அல்லாஹ்வினால் புனிதமாக்கப்பட்டவை என்பதற்கு திருமறை விரிவுரையாளர்கள் ஐம்பெருங்கடமைகள், வணக்க வழிபாடுகள் என்றும் குறிப்பாக ஹஜ்ஜின் கிரியைகள் என்றும், சிலர் ஹரம் ஷரீஃப், கஃபத்துல்லாஹ், மக்கா ஷரீஃப், ஹரம் ஷரீஃபில் அமைந்துள்ள ஜம்ஜம், சஃபா, மர்வா, மகாமே இப்றாஹீம் மேலும் 4 புனித மாதங்கள் என்பதாகவும் விளக்கமளித்துள்ளனர்.

அல்லாஹ்வின் மற்றொரு கட்டளை அவ்விஷயத்தில் இவ்வாறு வருகிறது.

ذٰلِکَ وَ مَنْ يُّعَظِّمْ شَعَائِرَاللّٰهِ فَاِنَّهَا مِنْ تَقْوَى الْقُلُوْب (سورة حج آيت ۔ ٣١)

“எவர் அல்லாஹ்வுடைய அடையாளச் சின்னங்களை கண்ணியப்படுத்துகிறாரோ அது நிச்சயமாக இதயங்களின் தக்வா - பயபக்தி - ஆகும்”.

இங்கு அல்லாஹ்வின் புனித சின்னம் என்பது குர்பானி பிராணியாகும். அதை நல்ல விலைக்கு நல்ல பிராணியை வாங்க வேண்டும் என்பதாக ஹஜ்ரத் இப்னு அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹுமா கூறுகிறார்கள்.

எனினும் இறை புனிதச் சின்னங்கள் - ஷஆயிருல்லாஹ் என்பது மேற்குறிப்பிட்ட அனைத்தையும் அது உயிருள்ளதாயினும், உயிரற்றதாயினும், வஸ்துக்களாயினும், கிரியைகளாயினும் அது சார்ந்த அனைத்து விஷயங்களையும் உள்ளடக்கியதே.

وَالْبُدْنَ جَعَلْنٰهَا لَکُمْ مِّنْ شَعَائِرِ اللّٰهِ لَکُمْ فِيْهَا خَيْرٌ (سورة حج آيت ۔ ٣٦)

அல்லாஹ் தன் திருமறையில் மேலும் குர்பானி ஒட்டகங்களை அல்லாஹ்வுடைய அடையாளங்களில் உள்ளவையாக உங்களுக்கு நாம் ஆக்கிவைத்தோம். உங்களுக்கு அவற்றில் நன்மையுண்டு.

அவ்வாறே ஹஜ்ரத் இஸ்மாயீல் அலைஹிஸ்ஸலாம் பாதம்பட்டு ஊற்றெடுத்த ஜம்ஜம், தமது மகனாரின் தாகம் தீர்க்க ஓடி ஓடி அன்னை ஹாஜரா அம்மையார் நீர் தேடிய சஃபா, மர்வா மலைக்குன்றுகள் ஆகியவற்றையும் அல்லாஹ் தமது புனிதச் சின்னங்கள் என்று குறிப்பிடுகிறான்.

إِنَّ الصَّفَا وَالْمَرْوَةَ مِن شَعَائِرِ اللَّهِ فَمَنْ حَجَّ الْبَيْتَ أَوِ اعْتَمَرَ فَلَا جُنَاحَ عَلَيْهِ أَن يَطَّوَّفَ بِهِمَا وَمَن تَطَوَّعَ خَيْرًا فَإِنَّ اللَّهَ شَاكِرٌ عَلِيمٌ (سورہ بقرہ آیت ۱۵۸)

"நிச்சயமாக சஃபா. மர்வா குன்றுகள் அல்லாஹ்வின் அடையாளச் சின்னங்களில் உள்ளவையாகும். எனவே எவர் கஃபாவை ஹஜ் அல்லது உம்ரா செய்வாரோ அவர்மீது அவ்விரண்டையும் (சயீ) சுற்றுவது குற்றமாகாது. எவர் நன்மையை உபரியாகச் செய்கிறாரோ நிச்சயமாக அல்லாஹ் நன்றிபாராட்டுபவனாகவும், யாவற்றையும் அறிந்தவனாகவுமிருக்கிறான்".

ஹஜ், உம்ரா இரண்டிலும் சஃபா, மர்வாவை சயீ செய்வது வாஜிபாக இருக்கிறது.

திருமறை விரிவுரையாளர்கள் ஷஆயிருல்லாஹ் - அல்லாஹ்வின் புனிதச் சின்னங்கள் - என்பதற்கு மார்க்கத்தின் அடையாளங்கள் என்று கூறியுள்ளார்கள். உதாரணமாக கஃபா, சஃபா, மர்வா, மினா, முஜ்தலிபா, அரபாத், பள்ளிவாசல்கள், நபிமார்கள், வலிமார்கள் வாசஸ்தலங்கள் போன்ற பரக்கத்மிக்க இடங்கள், அய்யாமுத்தஷ்ரீக் எனப்படும் துல்ஹஜ்ஜின் 9,10,11,12 ஆகிய நாட்கள், இரு பெருநாள்கள், ரமழான், துல்கஃதா, துல்ஹஜ், ரஜப் ஆகிய 4 புனித மாதங்கள் போன்ற காலங்கள் அவ்வாறே பாங்கு, இகாமத், ஜமாஅத் தொழுகை, ஜும்ஆ தொழுகை, இஸ்லாமிய அடையாளங்களில் கத்னா செய்து கொள்வது, தொப்பி அணிவது, தாடியை ஒழுங்குபடுத்துவது, மீசையை குறைப்பது போன்ற அத்தியாவசிய சுன்னத்துக்கள் என அனைத்தும் வரும். இவைகள் அனைத்தையும் கண்ணியப்படுத்துவது தக்வா - ஈமானின் அடையாளமாகும்.

முஸ்லிம்களின் கிப்லாவான அல்லாஹ்வின் புனிதச் சின்னங்களில் முதன்மையானதுமான கஃபத்துல்லா ஷரீஃபைப் பற்றி குர்ஆன் கூறுகிறது.

اِنَّ اَوَّلَ بَيْتٍ وُّضِعَ لِلنَّاسِ لَلَّذِىْ بِبَكَّةَ مُبٰرَكًا وَّهُدًى لِّلْعٰلَمِيْنَ (سورة آلِ عِمران۔ آيت ۹۶)

"(இறைவணக்கத்திற்கென) மக்களுக்காக (இவ்வுலகில் வழிபாட்டு ஆலயமாக) வைக்கப்பட்டதில் நிச்சயமாக முதல் வீடாகிறது பக்கா (எனும் மக்கா)வில் உள்ளது தான். அது பரக்கத் மிக்கதாகவும், உலகத்தார்க்கு நேர்வழி காட்டக் கூடியதாகவுமுள்ளது".

மேலும் ஹரம் ஷரீஃபில் அமைந்துள்ள புனிதச் சின்னங்களில் மகாமு இப்றாஹீம் முக்கியமானது. மகாமு இப்றாஹீம் என்பது தந்தை இப்றாஹீம் அலைஹிஸ்ஸலாம் பாதச் சுவடு பதிந்துள்ள பாறையாகும். அப்பாறை மீது நின்றுதான் கஃபாவை அவர்கள் கட்டினார்கள் என்று வரலாறு கூறுகிறது. அதைக் குறித்து அல்லாஹ் தன் திருமறையில்

فِيْهِ اٰيٰتٌۢ بَيِّنٰتٌ مَّقَامُ اِبْرٰهِيْمَ (سورة آلِ عِمْران - آيت ٩٧)

"அக்கஃபாவில் (ஹரமில்) தெளிவான அத்தாட்சிகள் (பல) உண்டு. (அவற்றில்) மகாமு இப்றாஹீமுமுண்டு. அத்தோடு அவ்விடத்தில் நின்று தொழும்படியும் அல்லாஹ் உத்தரவிட்டுள்ளான்".

وَاتَّخِذُوْا مِنْ مَّقَامِ اِبْرٰهِيْمَ مُصَلًّى (سورة بقرة - آيت - ١٢٥)

"மகாமு இப்றாஹீமை தொழுமிடமாக ஆக்கிக் கொள்ளுங்கள்". மேலும் அவ்வாறே ஹாஜிகள் குர்பானி கொடுக்கும் ஸ்தலமான மினாவும் அல்லாஹ்வின் புனிதச் சின்னங்களில் உள்ளதாகும். அங்கு தான் தமது தந்தை இப்றாஹீம் நபி அலைஹிஸ்ஸலாம் அவர்கள் தமது புதல்வன் இஸ்மாயீல் அலைஹிஸ்ஸலாம் அவர்களை பலியிடக் கொண்டு வந்து கிடத்தி, பின்பு சுவர்க்க ஆட்டை குர்பானி கொடுத்தார்கள். இவ்வரலாற்றை, தியாகத்தை நினைவு கூறும் விதமாக அல்லாஹ் அவ்விடம் குர்பானி கொடுப்பதை ஹஜ்ஜின் அமலாக அதை புனிதச் சின்னமாக ஆக்கியுள்ளான்.

ஹஜ்ரத் மூஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்குப் பின் அவர்களது சமுதாயத்தவர்களான யூத-பனீ இஸ்ராயீலர்கள் ஜாலூத் எனும் கொடிய அரசனிடம் மாட்டிக் கொண்டனர். அப்போது அல்லாஹுத்தஆலா யாஃகூப் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் கடைசி மகனும், நபி யூசுப் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் இளைய சகோதரருமான புன்யாமீன் அவர்களின் வம்சத்தில் ஹஜ்ரத் ஷம்வீல் அலைஹிஸ்ஸலாம் அவர்களை நபியாக அனுப்பிவைத்தான்.

அவர்கள் தமது சமூகத்தாரிடம் அல்லாஹ் உங்களின் அரசராகவும், படை நடத்திச்செல்பவராகவும் ஹஜ்ரத் தாலூத் அவர்களை நியமித்துள்ளான் என்றபோது யூதர்கள் கேட்டனர். அல்லாஹ் எங்களுக்கு நபியானாலும், அரசராயினும் ஹஜ்ரத் யஃகூப் அலைஹிஸ்ஸலாம் வம்சத்தில் தானே அனுப்புவான். அவ்வாறிருக்க அவ்வம்சத்தை சாராத தாலூத் அவர்கள் எப்படி அரசராக முடியும்? அதற்கு விடைபகர்ந்த ஷம்வீல் அலைஹிஸ்ஸலாம் ஆட்சியும், நுபுவத்தும் எந்த வம்சத்திற்கும் சொந்தமல்ல. அல்லாஹ் அதை தான் நாடியவருக்கு அளிக்கிறான் என்றார்கள். இவ்வரலாற்றை குர்ஆன் ஷரீஃப் இவ்வாறு எடுத்தியம்புகிறது.

قَالَ اِنَّ اللّٰهَ اصْطَفٰهُ عَلَيْكُمْ وَزَادَهٗ بَسْطَةً فِى الْعِلْمِ وَالْجِسْمِ ؕ وَاللّٰهُ يُؤْتِىْ مُلْكَهٗ مَنْ يَّشَآءُ

(سورة بقرة - آيت - ٢٤٧)

நபி ஷம்வீல் அலைஹிஸ்ஸலாம் கூறினார்கள். "நிச்சயமாக அல்லாஹ் ஹஜ்ரத் தாலூத் அவர்களை உங்களின் மீது (அரசராக) தேர்வு செய்துள்ளான். மேலும் அவர்களுக்கு கல்வியையும், உடல் பலத்தையும் அதிகம் தந்துள்ளான். அல்லாஹ் தன் ஆட்சியை நாடியவருக்கு வழங்குவான்". அவ்வாறெனின் அவர்கள் எங்கள் அரசென்பதற்கு அத்தாட்சி என்னவென யூதர்கள் மீண்டும் வினவ அதற்கு ஹஜ்ரத் ஷம்வீல் அலைஹிஸ்ஸலாம் கூறிய பதிலை திருமறை இவ்வாறு கூறுகிறது.

وَقَالَ لَهُمْ نَبِيُّهُمْ اِنَّ اٰيَةَ مُلْكِهٖۤ اَنْ يَّاْتِيَكُمُ التَّابُوْتُ فِيْهِ سَكِيْنَةٌ مِّنْ رَّبِّكُمْ وَبَقِيَّةٌ مِّمَّا تَرَكَ اٰلُ مُوْسٰى
وَاٰلُ هٰرُوْنَ تَحْمِلُهُ الْمَلٰٓئِكَةُ ؕ اِنَّ فِىْ ذٰلِكَ لَاٰيَةً لَّكُمْ اِنْ كُنْتُمْ مُّؤْمِنِيْنَ (سورة بقرة - آيت - ٢٤٨)

"இன்னும் அவர்களுடைய நபி (ஷம்வீல்) அலைஹிஸ்ஸலாம் அம்மக்களை நோக்கி, நிச்சயமாக அவருடைய ஆட்சிக்குரிய அடையளமாகிறது உங்களிடம் ஒரு தாபூத் (பேழை) வருவதாகும். அதில் உங்களது ரப்பில் நின்றும் (உங்களுக்கு) அமைதி அளிக்கக்கூடியதாக இருக்கும். அன்றியும் மூஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களின் குடும்பத்தாரும், ஹாரூன் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் குடும்பத்தாரும் விட்டு சென்றவற்றில் மீதியுள்ளதும் அதிலிருக்கும். அதனை மலக்குகள் சுமந்து வருவார்கள். நீங்கள் முஃமீனாக இருந்தால் நிச்சயமாக அதில் உங்களுக்கு அத்தாட்சி இருக்கிறது".

அதன்பின் யூதர்களின் மீது ஜிஹாத் கடமையானது. ஆயினும் அவர்களில் பலர் போர் செய்ய வரவில்லை. வெறும் 313 பேர் மட்டுமே ஜிஹாதுக்கு முன்வந்தனர். அவர்களில் ஹஜ்ரத் தாவூத் அலைஹிஸ்ஸலாம் ஒருவர். அவர்கள் தான் கொடுங்கோலன் ஜாலூத்தை வீழ்த்தினார். அதற்கு பரிசாக தாலூத் மன்னர் தனது மகளாரை ஹஜ்ரத் தாவூத் நபிக்கு மணமுடித்து வைத்தார்கள். மன்னர் தாலூத்திற்கு பிறகு ஹஜ்ரத் தாவூத் நபியவர்கள் மன்னராக பதவியேற்றனர். திருமறை இதனை இப்படிக் கூறுகிறது.

وَقَتَلَ دَاوُدُ جَالُوتَ وَآتَاهُ اللَّهُ الْمُلْكَ وَالْحِكْمَةَ وَعَلَّمَهُ مِمَّا يَشَاءُ (سورة بقرة - آيت - ٢٥١)

"இன்னும் தாவூத் அலைஹிஸ்ஸலாம் ஜாலூத்தை கொன்றார்கள். இன்னும் அல்லாஹ் நாடியவருக்கு அரசாட்சியையும், ஞானத்தையும் கொடுப்பான்".

குர்ஆன் கூறும் **தாபூத்** என்பது 3 கை நீளமும் 2 கை அகலமுள்ள மரத்தாலான பெட்டி. அதனைப் பற்றி ஜலாலைன், ஜமல் காஜின், மதாரிக் போன்ற விரிவுரைகள் இவ்வாறு விவரிக்கின்றது. தாபூத் பேழை ஹஜ்ரத் ஆதம் அலைஹிஸ்ஸலாமுக்கு அல்லாஹ் இறக்கி. வைத்தான். அதில் எம்பிரான் முஹம்மத் முஸ்தஃபா ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் வரையுள்ள எல்லா நபிமார்களின் உருவப்படங்கள் (தஸ்வீர்) அதிலிருந்தன.

குறிப்பாக நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் தொழுகையில் நிற்பதைப் போன்றும், அவர்களது சஹாபாக்கள் ரலியல்லாஹு அன்ஹும் அவர்களை சுற்றி நிற்பதைப் போன்றுமுள்ள படம் மட்டும் பச்சை மரகதத்தில் இருந்தது. அதிலிருந்த அனைத்து படங்களையும் ஹஜ்ரத் ஆதம் அலைஹிஸ்ஸலாம் கண்டார்கள். பின்பு அது ஹஜ்ரத் மூஸா அலைஹிஸ்ஸலாம் நபியிடம் வந்து சேர்ந்தது. அவர்கள் அதில்தான் தவ்ராத்தையும், மேலும் சிலதையும் வைத்துக்கொண்டிருந்தார்கள். மேலும் ஹஜ்ரத் மூஸாஅலைஹிஸ்ஸலாம் பயன்படுத்திய அஸா (கைத்தடி) அவர்களது புனித பாதணிகள் இன்னும் ஹாரூன் அலைஹிஸ்ஸலாமின் அஸா, தலைப்பாகை மேலும் பனூ இஸ்ராயீல்களுக்கு இறங்கிய சுவன உணவாக 'மன்' கொஞ்சமும் அதிலிருந்தது.

ஹஜரத் மூஸா அலைஹிஸ்ஸலாம் போர்க்காலங்களில் அதை படைவீரர்களுக்குமுன் வைப்பார்கள். அதைக் கண்டதும் வீரர்களுக்கு மனச்சாந்தியும், தைரியமும் அதிகரிக்கும்.

ஹஜ்ரத் மூஸா நபியவர்களின் வஃபாத்திற்குப் பிறகும் யூதர்கள் தங்களது கஷ்ட காலத்தில் அதை முன் வைத்து துஆ செய்து பயனடைந்தார்கள். போரின் போது அதை முன் வைத்து வெற்றி பெற்றார்கள்.

பின் யூதர்களிடம் தீமையும், கெட்ட புத்தியும், தீவினையும் மிகைத்த போது அல்லாஹ் அவர்களின்மீது அமாலிக்கா கூட்டத்தினரை ஆளுமை செய்வித்தான். அவர்கள் யூதர்களை வேதனைப்படுத்தியதோடு அவர்களிடமிருந்து தாபூத் பேழையையும் பறித்துக் கொண்டனர். அதை அசுத்தமான கேவலமான இடங்களிலெல்லாம் வைத்து அவமரியாதை செய்ததால் அல்லாஹுத்தஆலா அமாலிக்கா கூட்டத்தார்கள்மீது பல நோய்களையும், முசீபத்துகளையும் இறக்கினான். அத்தோடு அவர்களது ஆட்சியிலிருந்த 5 நாடுகளும் அழிவைச் சந்தித்தது. தொடரும் தங்களது அழிவின் காரணத்தை அறிந்த அமாலிக்காவினர் தாபூத் பேழையை ஒரு மாட்டு வண்டியில் வைத்து விட்டு விட்டனர். அதை மலக்குகள் மன்னர் தாலூத் அவர்கள் வசம் சேர்ப்பித்தனர். அதன் பின்பே யூதர்கள் தாலூத்தை மன்னராக ஏற்று அவர்களின் பின் அணி திரண்டார்கள். தாபூத் பேழையைக் கண்ட பின்பே வெற்றி பெறுவோம் என்ற நம்பிக்கையும் அவர்களுக்கு ஏற்பட்டது. அதன்பின் மன்னர் தாலூத், தாவூத் நபி உட்பட 70,000 வீரர்களை தேர்வு செய்தனர். ஆனால் இறுதியாக அவர்களில் ஈமானில் உறுதிகொண்ட 313 பேர் மட்டுமே போர் செய்து வென்றனர். (தஃப்ஸீர் கஜாயினுல் இர்ஃபான்)

தாபூத்திலுள்ள உருவப்படங்கள் மனிதர்களால் உருவாக்கப்பட்டதல்ல. மாறாக இறைவன் புறத்திலிருந்து வந்ததாகும். அன்றியும் உயிருள்ளவற்றை உருவப்படமாக வரைவது ஹராமாகும்.

மேற்கண்ட ‘தாபூத்’தின் செய்திகள் மூலம் நபிமார், வலிமார்களின், நல்லோர்களின் ஆசார் எனும் நினைவுப் பொருட்கள், பரக்கத்மிக்க புனித இறைச்சின்னங்களாகும். அவற்றை மதிப்பது, மரியாதை செய்வது ஈமானின் அங்கமாகும். மேலும் அவற்றின் பரக்கத்தால் துஆ கபூலாகிறது. தேவை நிறைவேறுகிறது. போரில் வெற்றி கிடைக்கிறது. மனச்சாந்தி உண்டாகிறது. தைரியம் பிறக்கிறது. அவற்றை அவமரியாதை செய்வது, பழிப்பது நமக்கு முசீபத், பலாய்கள், நோய், நொடி ஏற்படவும், அழிவுக்கு வழிவகுக்கிறது என்பனவற்றையெல்லாம் தெளிவாகப் புரிந்துகொள்கிறோம்.

فَلَمَّآ اَنْ جَآءَ الْبَشِيْرُ اَلْقٰهُ عَلٰى وَجْهِهٖ فَارْتَدَّ بَصِيْرًا۔ (سورة يوسف آيت ٩٦)

மேலும் ஹஜ்ரத் யூசுப் நபி அலைஹிஸ்ஸலாம் அவர்களின் புனிதச் சட்டையும், ஷஆயிருல்லாஹ் எனும் இறைச்சின்னங்களில் ஒன்றே. அதன் பரக்கத்தால் அல்லாஹ் யஃகூப் நபி அலைஹிஸ்ஸலாமின் இழந்த பார்வையை மீட்டித்தந்தான் என்று குர்ஆன் கூறுகிறது.

இவ்வாறாக பரகத், ரஹ்மத், வெற்றி, ஆரோக்கியம் தரவல்ல, முசீபத்களை, கஷ்ட, நஷ்டத்தை நிவர்த்தி செய்யக்கூடிய ஆசார் - நினைவுச்சின்னங்களை, அல்லாஹ்வின் புனிதச்சின்னங்களைப்பற்றிய ஹதீஸ்களையும் கொஞ்சம் பார்ப்போம்.

## புனிதச் சின்னங்கள் பற்றிய ஹதீஸ்கள்

ஹஜ்ரத் ஸஹ்ல் ரலியல்லாஹூ அன்ஹூ கூறுகிறார்கள். ஒரு தோழர் நாயகத்திடம் தங்களது சால்வை வேண்டுமென கேட்டுப் பெற்றுக்கொண்டார்கள். பின்பு அதன் காரணத்தை எங்களிடம் கூறினார்கள். فقال الرجل واللّٰه ماسألتها الا لتكون كفنى يوم اموت

فقال سهل فكانت كفنه (بخارى)

“அல்லாஹ்வின் மீதாணை அது எனக்கு கஃபனாக வேண்டுமென்றுதான் நான் வாங்கினேன். அவர் கூறியது போலவே அவருக்கு அச்சால்வை கஃபன் துணியானது”. (புகாரி)

அஸ்மா பின்த் அபூபக்ர் ரலியல்லாஹூ அன்ஹூமா அவர்களிடம் பெருமானாரின் ஜிப்பா ஒன்றிருந்தது. அதைப்பற்றி அஸ்மா ரலியல்லாஹூ அன்ஹா கூறுகிறார்கள்.

فقالت هذه كانت عند عائشة حتى قبضت فلما قبضت
قبضتها - وكان النبى صلى الله عليه وسلم يلبسها فنحن
نغسلها للمرضى يستشفى بها - (ص ١٩٠ مسلم جلد دوم)

அந்த ஜிப்பா ஆயிஷா ரலியல்லாஹூ அன்ஹாவின் மரணம் வரை அவர்களிடமே இருந்தது. பின்பதை நான் வைத்துக்கொண்டேன். நாயகம் சல்லல்லாஹூ அலைஹி வசல்லம் அதனைக் கழட்டித் தரும்போது அதனை நாங்கள் நீரில் கழுவி அந்நீரை நோயாளிகளுக்கு குடிக்கக் கொடுக்க நோய் சுகமாகிவிடும்.

(முஸ்லிம் பாகம்-2, பக்-190)

ஹஜ்ரத் அனஸ் பின் மாலிக் ரலியல்லாஹு அன்ஹுமா கூறுகின்றார்கள். ஒருமுறை நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் எங்கள் வீட்டிற்கு வந்தபோது குவளையில் நீரெடுத்து பருகினார்கள். எனது தாயார் உம்முசுலைம் ரலியல்லாஹு அன்ஹா பரக்கத்மிக்க அக்குவளையில் எம்பிரானின் இதழ்பட்ட அப்பகுதியை வெட்டி தனியாக பத்திரப்படுத்தி வைத்துக் கொண்டார்கள். (முஸ்னத் இமாம்அஹ்மத் பின் ஹம்பல்)

ஹஜ்ரத் குதாஷ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் நீரருந்தும் குவளை ஒன்றை அவர்களிடமிருந்து பெற்று அதனைப் பத்திரப்படுத்தி வைத்திருந்தார்கள். ஹஜ்ரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு, ஹஜ்ரத் குதாஷ் ரலியல்லாஹு அன்ஹு அவர்களிடம் சென்றால் அக்குவளையை வாங்கி நீரருந்தி, முகத்திலும் அந்நீரை ஊற்றிக்கொள்வார்கள். ஹஜ்ரத் குதாஷ் ரலியல்லாஹு அன்ஹு ஜம்ஜம் நீரை அதில் ஊற்றி வைத்திருப்பார்கள். (தர்ஜுமா குதாஷ், இஸாபா, கன்ஜுல் உம்மால்)

ஹஜ்ரத் அபூ அப்துர்ரஹ்மான் சலமி ரலியல்லாஹு அன்ஹு கூறுகிறார்கள். ஹஜ்ரத் அஹ்மத்பின் ஃபழ்லவி ரலியல்லாஹு அன்ஹு அவர்களிடம் நாயகத்தின் திருக்கரம்பட்ட வில்லொன்று இருந்தது. அதை அவர்கள் சுத்தமின்றி தொடவே மாட்டார்கள். அதை அவர்களே கூறுகிறார்கள்.

قال مامسست القوس بيدى الا على طهارة منذ بلغنى
ان النبى صلى الله عليه وسلم اخذ القوس بيدى-
(ص ٤٤ الشفا جلد دوم قاضى عياض مالكى متوفى ٥٤٤ه)

நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களிடம் நான் அந்த வில்லை வாங்கிய நேரம் முதல் அதை நான் அசுத்த நிலையில் தொட்டதேயில்லை. (ஷிஃபா பக்-44, பாகம்-2)

كان رسول الله صلى الله عليه وسلم اذا صلى الغداة
جاء خدم المدينة بانيتهم فيها الماء- فما يؤتى باناء
الا غمس يده فيها- فربما جاء فى الغداة الباردة فيغمس
يده فيها (صحيح مسلم جلد دوم ص ٢٥٦)

ஹஜ்ரத் அனஸ் ரலியல்லாஹு அன்ஹு கூறுகிறார்கள். ரசூல் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் ஃபஜர் தொழுகை முடிந்ததும் மதீனத்துச் சிறார்கள் (தங்களது வீட்டிலிருந்து)

பாத்திரத்தில் தண்ணீரெடுத்துக் கொண்டு வருவார்கள். நபிகளார் அதில் தங்களது புனிதக் கரத்தை நனைத்துக் கொடுப்பார்கள். குளிர்காலங்களில் கூட சிறுவர்கள் நீர்ப்பாத்திரத்துடன் வந்துவிடுவார்கள். நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் தமது புனிதக் கரத்தை நனைத்துக் கொடுப்பார்கள். (முஸ்லிம். பாகம்-2, பக்கம்-256)

رأيت بلالا اخذ وضوء النبي صلى الله عليه وسلم
ورأيت الناس يبتدرون ذلك الوضوء. فمن اصاب منه
شيئا تمسح به. ومن لم يصب منه شيئا اخذ من بلل
يد صاحبه۔ (بخاری)

ஹஜ்ரத் அபூ ஜுஹைஃபா ரலியல்லாஹு அன்ஹு கூறுகிறார்கள். நாயகம் ஒளு செய்து மிஞ்சிய நீரை ஹஜ்ரத் பிலால் ரலியல்லாஹு அன்ஹு எடுத்ததும் சஹாபாக்கள் போட்டி போட்டுக் கொண்டு அதனைப் பெறுவர். கிடைத்தவர்கள் அந்நீரை தங்களது உடலில் பூசிக் கொள்வர். கிடைக்காதவர்கள் கிடைத்தவர்களின் கையிலுள்ள ஈரத்தை எடுத்து தம் உடலில் பூசுவார்கள். (புஹாரி)

ثلم رسول الله صلى الله عليه وسلم اظفاره وقسم
بين الناس (مسند امام احمد بن حنبل)

ஹஜ்ரத் அனஸ் பின் மாலிக் ரலியல்லாஹு அன்ஹுஅவர்கள் அறிவிக்கின்றார்கள். "நபிகளார் தமது நகத்தை வெட்டி மக்களுக்கு பங்கிட்டார்கள்".

رايت رسول الله صلى الله عليه وسلم والحلاق يحلقه
وطاف به اصحابه فما يريدون ان تقع شعرة الا في
يد رجل۔ (ص ۲۵۶ جلد دوم مسلم)

அனஸ் பின் மாலிக் ரலியல்லாஹு அன்ஹுமா அறிவிக்கின்றார்கள். "ரசூல் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் தமது ரோமங்களை களைந்தால் அது யாராவது ஒரு நபரின் கரத்தில்தான் விழும். கீழே விழாது". (முஸ்லிம். பாக.-2 பக்-256)

قلت لعبيدة عندنا من شعر النبي صلى الله عليه وسلم
اصبناه من قبل انس او من قبل اهل انس قال لان تكون عندي
شعرة منه احب الي من الدنيا وما فيها۔ (بخاری۔کتاب الوضوء)

ஹஜ்ரத் முஹம்மத் பின் சீரின் தாபிஈ ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் அறிவிக்கின்றார்கள். "நாயகத்தின் திருமுடி எங்களிடம் உள்ளது. அது அனஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள்

குடும்பத்தார்கள் மூலம் எங்களுக்கு கிடைத்தது என்று நான் கூறினேன். அப்போது உபைதா ரலியல்லாஹு அன்ஹு நாயகத்தின் புனிதமுடி என்னிடமிருப்பது இவ்வுலகத்திலுள்ள எல்லா வஸ்து - செல்வங்களைவிட எனக்கு மிக விருப்பமானது என்று கூறினார்கள்". (புஹாரி கிதாபுல் ஒளு)

ஹஜ்ரத் ஷைக் அப்துல் முஹத்திஸ் தெஹ்லவி ரஹ்மத்துல்லாஹி அலைஹி எழுதுகிறார்கள். "ஹஜ்ரத் உமர் பின் அப்துல் அஜீஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்களிடம் நாயகத்தின் ஆசார் - நினைவுப் பொருட்கள் சில இருந்தது. அதை ஒரு அறையில் பத்திரமாக வைத்திருந்தார்கள். தினமும் ஒருவேளை அதை ஜியாரத் செய்வார்கள். அவர்களை சந்திக்க வரும் நல்லோர், பெரியோர்களையும் அழைத்துச் சென்று சந்திக்கச் செய்வார்கள்". மேலும் இப்படிக் கூறுவார்கள். "இவை தாம் என் சொத்து. அல்லாஹ் இவற்றின் பரக்கத்தால் உங்களையும் சங்கைபடுத்துவானாக". அவர்களிடமிருந்த நினைவுப் பொருட்கள் படுக்கைவிரிப்பு, தோல் தலையணை, ஒருஜோடி பாதரட்சை, சில அம்புகள் உள்ள அம்புக்கூடு ஆகியவை.

அத்தலையணையில் நாயகத்தின் புனித சிரசின் அச்சுப்பதிந்திருந்தது. ஒருமுறை ஒருவர் தீரா நோயால் பாதிக்கப்பட்டு, சிகிச்சை பலனின்றிகிடந்த போது அத்தலையணையை நனைத்து அந்நீரை குடிப்பிக்கப்பட்டதும் அந்நோயாளி குணம் பெற்றார். (மதாரி ஜுன் நுபுவத்)

அல்லாமா ஜலாலுத்தீன் சுயூத்தி ரஹ்மத்துல்லாஹி அலைஹி (பிறப்பு ஹி849-வபாத் ஹி911) அவர்கள் இந்த ஹதீஸை பதிவு செய்கிறார்கள். கஃப்பின் ஜுஹைர் ரலியல்லாஹு அன்ஹு நாயகத்தின் முன் நாயகத்தின் புகழை -பானத் சுஆத் - பாடியபோது எம்பிரான் தமது தோலிலிருந்து புனிதச் சால்வையை அன்பளிப்புச் செய்தார்கள். அந்த சால்வையை ஹஜ்ரத் முஆவியா ரலியல்லாஹு அன்ஹு "அதனை 10,000 திர்ஹத்திற்கு தரும்படி கடிதமனுப்ப அவர்கள் மறுத்துவிட்டார்கள். பின்பு கஃபு ரலியல்லாஹு அன்ஹுவின் வஃபாத்திற்கு பிறகு அச்சால்வையை முஆவியா ரலியல்லாஹு அன்ஹு அவர்களது மக்களிடமிருந்து 20,000 திர்ஹத்திற்கு வாங்கினர்கள். அது உமய்யா மன்னர்களிடமே மாறி மாறி இருந்து வந்தது. (தாரீகுல் குலபா பக்.-82)

அல்லாமா அலீகாரி ரஹ்மத்துல்லாஹி அலைஹி எழுதுகிறார்கள். "என்னிடம் நாயகத்தின் கீழங்கி, மேலங்கி, சால்வை, திருமுடிகள் சில, சில நகத்துண்டுகள் இருக்கிறது. என்னை கஃபனிடும்போது எனக்கு அண்ணலாரின் கீழங்கி, மேலங்கியை அணிவியுங்கள். அண்ணலாரின் சால்வையை வைத்து என் உடலை கட்டுங்கள். சுஜூதின் இடங்களில் (நெற்றி போன்றதில்) நாயகத்தின் திருமுடி, புனித நகத்துண்டுகளை வைத்து (கஃபனிட்டு அடக்கம் செய்து) அர்ஹமுர்ராஹிமீன் அல்லாஹ்வின் கிருபையில், கருணையில் விட்டு விடுங்கள்" என்று அமீர் முஆவியா ரலியல்லாஹு அன்ஹு வஸிய்யத் செய்தார்கள். (மிர்காத் ஷரஹ் மிஷ்காத் பக்-628, பாகம் - 5)

மினா, சஃபா, மர்வா மகாமு இப்ராஹீம், தாபூத் பேழை, நீர்ப்பாத்திரம், ஜிப்பா, சால்வை, நகம், முடி, வில், பாதணிகள், விரிப்பு, தலையணை போன்ற சாதாரண பொருட்கள் கூட நபிமார்களுடன் சம்பந்தப்படும்போது எவ்வளது உயரிய அந்தஸ்துள்ளதாகவும், ஆசார் எனும் நினைவுச் சின்னங்களாகவும் இறைவன் கூறும் ஷஆயிருல்லாஹ் எனும் இறைச்சின்னங்களாகவும் ஆகின்றன என்பதையும், அவற்றை சங்கை செய்வது ஈமானின் அங்கம் என்பதனையும் அதை சஹாபாக்கள், தாபிஈன்கள், தபஃதாபிஈன்கள் ஆகிய சலஃபீன்கள் எவ்வளவு சங்கையும், மரியாதையும் செய்துள்ளனர் என்பதையும், அதன்மீது எந்தளவு பற்றும், நேசமும் கொண்டிருந்தனர் என்பதையும் நாம் கண்டோம்.

## சஹாபாக்களின் நடைமுறை

கீழ்கண்ட தலைப்பின் கீழ் இமாம் புஹாரி ரஹ்மத்துல்லாஹி அலைஹி சில ஹதீஸ்களை பதிவு செய்துள்ளார்கள்.

باب ماذكر من درع النبي صلى الله عليه وسلم وعصاه وسيفه
وقدحه وخاتمه۔ وما استعمل الخلفاء بعده من ذلك
مما لم يذكر قسمته ومن شعره ونعله وآنيته مما يتبرك
اصحابه وغيرهم بعد وفاته۔

நாயகத்தின் கைத்தடி, வாள், பாத்திரம், மோதிரம் மேலும் நாயகத்திற்குப் பின் (மக்களுக்கு) பங்கிடப்படாது கலீபாக்கள் பயன்படுத்திய பொருட்களைப் பற்றி, இன்னும் அவர்களது புனிதமுடி, பாதணிகள், உபயோகித்த பாத்திரங்கள் பற்றிய அதை நாயகத்தோழர்களும், மற்றவர்களும் எவ்வாறு பரக்கத்தாக கருதினார்கள் என்பவை பற்றிய பாடம்.

عن انس ان ابا بكر رضى الله عنه لما استخلف بعثه ........ الى البحرين وكتب له هذا الكتاب وختمه وكان نقش الخاتم ثلثة اسطر - محمد سطر ورسول سطر والله سطر (صحيح بخارى)

ஹஜ்ரத் அனஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்களை கலீபா அபூபக்கர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் பஹ்ரைனுக்கு அனுப்பிய போது அவர்களுக்கொரு கடிதத்தை எழுதி அதில் பெருமானார் பயன்படுத்திய மோதிர முத்திரை இட்டார்கள். அம்மோதிர முத்திரையில் 3 வரிகள் பொறிக்கப்பட்டிருந்தது. முதல் வரியில் முஹம்மத் என்றும், 2ம் வரியில் ரசூல் என்றும் 3ம் வரியில் அல்லாஹ் என்றும் (அதாவது முஹம்மதுர் ரசூலுல்லாஹ் என்று) இருந்தது.

حدثنا عيسى بن طهمان قال اخرج الينا انس نعلين ....... جرداوين لهما قبالان - فحدثنى ثابت البنانى بعد عن انس انهما نعلا النبى صلى الله عليه وسلم (صحيح بخارى)

ஹஜ்ரத் ஈஸா பின் தஹ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் அறிவிக்கின்றார்கள். "அனஸ் ரலியல்லாஹு அன்ஹு எங்களிடம் இரு வாருள்ள இரு காலணிகளைக் காட்டினார்கள். அவை இரண்டும் பெருமானாரின் பாதரட்சைகள் என்று சாபித் பின் பன்னானி ரலியல்லாஹு அன்ஹு அவர்களும் அறிவித்தார்கள்.

عن ابى بردة قال اخرجت الينا عائشة رضى الله تعالى عنها كساء ملبدا وقالت فى هذا نزعت روح النبى صلى الله عليه وسلم - (صحيح بخارى)

ஹஜ்ரத் அபூதர்தா ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் அறிவிக்கிறார்கள். ஹஜ்ரத் ஆயிஷா (சித்திகா) ரலியல்லாஹு அன்ஹா எங்களுக்கொரு தடினமான விரிப்பைக் காட்டி இதிலிருந்த நிலையில் தான் நாயகத்தின் உயிர் பிரிந்தது எனக் கூறினர்கள். (புஹாரி)

عن انس بن مالك رضى الله عنه ان قدح النبى صلى الله ....... عليه وسلم انكسر فاتخذ مكان الشعب سلسلة من فضة قال عاصم رأيت القدح وشربت فيه (صحيح بخارى)

நபிகளாரின் புனித இதழ்பட்ட ஓர் நீர்க்குவளை ஹஜ்ரத் அனஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்களிடம் இருந்தது. நபிகளாரின் இதழ்பட்ட இடத்தை மட்டும் வெட்டி எடுத்து வெள்ளியை பதித்து பாதுகாத்து வைத்திருந்தார்கள். அதை தான் கண்டதாகவும், அதில் நீரருந்தியதாகவும் ராவி ஆஸிம் ரலியல்லாஹு அன்ஹு கூறுகிறார்கள். (புஹாரி)

...... ان علي بن حسين حدثه - انهم حين قدموا من
المدينة من عند يزيد بن معاوية مقتل حسين بن علي
رحمة الله عليه لقيه مسور بن مخرمة - فقال له هل لك
الي من حاجة تامرني بها - فقلت له لا - فقال له فهل انت
معطي سيف رسول الله صلى الله عليه وسلم - فاني اخاف
ان يغلبك القوم عليه - وايم الله لئن اعطيتنيه لا يخلص
اليهم ابدا - حتى تبلغ نفسي - الخ (صحيح بخاري)

இமாம் ஜைனுல் ஆபிதீன் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் அறிவிக்கின்றார்கள். இமாம் ஹுசைன் ஷஹீத் கர்பலா ரலியல்லாஹு அன்ஹுவின் ஷஹாதத்திற்குப் பிறகு யஜீத் பின் முஆவியாவிடமிருந்து நான் மதீனா சென்ற போது மஸ்வர் பின் மக்ரமா என்னைச் சந்தித்து தங்களுக்கு ஏதேனும் தேவையிருப்பின் எனக்கு கட்டளையிடுங்கள் என்றார்கள். எனக்கு எந்தத் தேவையுமில்லை எனக் கூறிவிட்டேன். பின்பு மஸ்வர் நாயகத்தின் வாளை எனக்கு கொடுப்பீர்களா? எனக் கேட்டார்கள். எதிரிகள் உங்களிடமிருந்து அதை வாங்கி விடுவார்கள் என்று பயப்படுகிறேன் என்றேன். அதற்கவர் அல்லாஹ்வின் மீதாணையாக என் உயிர் உள்ள வரை யாரும் என்னிடமிருந்ததை வாங்கமுடியாது என்றார்கள்.

## ஹுதைபிய்யாவின்... அற்புத நிகழ்வு

ஹிஜ்ரி 6ம் ஆண்டு நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் தம் தோழர்களுடன் உம்ரா செய்ய சென்று கொண்டிருந்த போது நிராயுதபாணிகளான அவர்களை ஹுதைபிய்யா என்னுமிடத்தில் மக்கத்து குறைஷி வீரர்கள் ஆயுதங்களோடு வந்து தடுத்தார்கள். பெருமானாரின் தரப்பில் தாங்கள் சண்டையிடும் நோக்கில் வரவில்லை. கஃபத்துல்லாஹ்வை தவாஃப் உம்ரா செய்யும் நோக்கில்தாம் வந்துள்ளதாக விளக்கிச் சொல்லியும் வழிவிட மறுக்கவே சிலதோழர்கள் போருக்குத் தயாராக உம்ரா செய்யும் நோக்கத்தில் வந்துவிட்டு சண்டையிடுவது இங்கிதமல்ல என நாயகம் கருதவே இருதரப்பினருமிடையே சில ஒப்பந்தங்களும், அடுத்தாண்டு வேண்டுமானால் உம்ராவுக்கு வரலாம் என்ற ஷரத்தும் உண்டானது. அவ்வொப்பந்த காலத்தில் ஹுதைபிய்யாவில் மக்காவினர் தரப்பில் தூதுவராக இருந்த உர்வா பின் மஸ்ஊத் ரலியல்லாஹு அன்ஹு (பின்பு முஸ்லிமாகிவிட்டார்கள்) நாயகத்திடம் நாயகத் தோழர்கள் நடந்துகொண்ட முறையை அங்கிருந்து திரும்பியதும் மக்கா குறைஷிகளிடம் இப்படி விவரிக்கிறார்கள்.

والله لقد وفدت على الملوك. ووفدت على قيصر و كسرى والنجاشي-
والله ان رأيت ملكا قط يعظمه اصحابه ما يعظم اصحاب محمد محمدًا-
والله ان تنخم نخامة الا وقعت فى كف رجل منهم فدلك بها وجهه وجلده.
واذا امرهم ابتدروا امره- واذا توضأ كادو يقتتلون على وضوئه. واذا تكلم خفضوا
اصواتهم عنده. وما يحدون اليه النظر تعظيما له - (ص ٣٧٩ جلد اول صحيح بخارى)

"அல்லாஹ்வின் மீதாணை நான் எத்தனையோ பல அரசர்களை சந்தித்துள்ளேன். ரோம், கைஸர், பாரசீக கிஸ்ரா அபீசினிய நஜ்ஜாஜி மன்னர்களையெல்லாம் சந்தித்துள்ளேன். ஆனால், அல்லாஹ் மீது சத்தியமாக முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் தோழர்கள் முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களை கண்ணியப்படுத்துவதைப் போல எந்த அரசரையும், எவரும் சங்கைப்படுத்தி நான் பார்த்ததில்லை. அல்லாஹ்வின் மீது ஆணையாக முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் எச்சில் துப்பினால் கூட அது யாராவது ஒருவரின் கையில் தான் விழுகிறது. அதை அவர் தனது முகத்திலும், தோலினும் பூசிக் கொள்கிறார். அவர்கள் ஒன்றை ஏவினால் அதை செயல்படுத்த விரைகிறார்கள். அவர்கள் ஒளு செய்தால் எஞ்சும் தண்ணீருக்காக தள்ளுமுள்ளு ஏற்படுகிறது. அவர்கள் பேசினால் அவர்களிடத்தில் அவர்களது தோழர்கள் சின்ன சப்தமோ, சலனமோ இல்லாது அடங்கி அமர்ந்துவிடுகிறார்கள். அவர்களுக்கு எப்படிப்பட்ட மரியாதையைச் செய்கிறார்கள் என்றால் அவர்களை யாரும் ஏறிட்டுக் கூட பார்ப்பதில்லை. (புஹாரி பக்கம்-379)

வேறு சில ரிவாயத்துகளில் இத்தோடு இன்னும் சில வாசகங்கள் இடம் பெற்றுள்ளன. அதாவது உர்வாபின் மஸ்ஊத் ரலியல்லாஹு அன்ஹு கூறினார்கள். முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களின் உடலிலிருந்து ஒரு முடி விழுந்தாலும் அதையும் எடுத்து பத்திரப்படுத்திக் கொள்கிறார்கள்.

இன்னும் சில ரிவாயத்தில் இப்படிச் சொன்னதாகவும் வருகிறது. நீங்கள் என்ன விலை கொடுத்தாலும் நாயகத்தின் தோழர்கள் அவர்களை விட்டு விட்டு வந்துவிட மாட்டார்கள். (நான் கண்டதை கூறிவிட்டேன்) இனி நீங்கள் என்ன முடிவெடுக்கிறீர்களோ எடுங்கள். (சீரத் இப்னு ஹிஷாம், பாகம்-2)

## பெருமானாரின் புனித புருவ ரோமங்கள்

நாயகத்தின் பேரர் இமாம் ஹஸன் ரலியல்லாஹு அன்ஹு ஹிந்த் இப்னு அபீஹாலாவைத் தொட்டும் அறிவிக்கின்றார்கள்.

"எம்பிரானின் பரிசுத்த புருவ ரோமங்கள் நீண்டதாக இருக்கும். மிக மிக அடர்த்தியுமிருக்காது. மிக அடர்த்தியுமின்றி நடுத்தரமாக இருக்கும். இரு புருவங்களுக்கிடையில் ஒரு நரம்பு இருக்கும். கோபத்தின் போதோ கம்பீர நிலையிலோ பார்த்தால் அந்நரம்பு புடைத்துக் கொண்டு நெளிவது தெரியும்".

(அல் வஃபா பி அஹ்வாலில் முஸ்தஃபா, பக்-443)

இரு புருவங்களுக்கிடையில் மிக குறுகிய இடைவெளிதான் இருக்கும். அதை நன்கு உற்று கவனித்தால்தான் தெரியும்.

இமாம் ஹஸன் ரலியல்லாஹு அன்ஹுவின் ரிவாயத்தில் கண் இமை முடிகளைப்பற்றி சொல்லப்பட்டுள்ளது. அது நல்ல கருமையுடன் நீண்டு, மெல்லியதாக, ஒட்டி, ஒட்டி இல்லாமல் (மிக நேர்த்தியாக வரிசையாக ஒட்டாமல் அடுக்கிவைத்ததைப் போல) இருக்கும். (அல் வஃபா பி அஹ்வாலில் முஸ்தஃபா)

ஹஜ்ரத் அலி கர்ரமல்லாஹு வஜ்ஹஹு, ஹஜ்ரத் சுவைத் பின் ஹஃப்லஹ் ரலியல்லாஹு அன்ஹு ஆகியோர் புருவங்கள் இணைந்து காணப்படும் என்றும் ஒரு சஹாபி புருவங்கள் மெல்லியதாக இருக்கும் என்றும் கூறியுள்ளனர்.

சாதாரணமாகப் பார்க்கும் போது புருவங்கள் இணைந்தது போல் தெரிந்தாலும் உற்று கவனித்தால் லேசான இடைவெளி தெரியும். ஹஜ்ரத் அலி ரலியல்லாஹு அன்ஹு நாயகத்தின் இமை முடிகள் நீண்டு அழகுடன் இருக்குமென்றும், ஹஜ்ரத் உம்முமஃபத், ஹஜ்ரத் அபூஹுரைரா ரலியல்லாஹு அன்ஹுமா ஆகியோர் அண்ணலாரின் புனித இமை முடிகள் நீண்டிருக்குமென்றும் கூறியுள்ளார்கள். (தலாயிலுன் நுபுவ்வத்)

## பெருமானாரின் முபாரக்கான தாடி

ரசூல் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களின் முபாரக்கான தாடி கருமையாக, பார்க்க அழகாக இருக்குமென நாயகத் தோழர்கள் நவின்றுள்ளார்கள்.

"நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களின் தாடி அடர்த்தியாக, நிரப்பமானதாக, நெஞ்சுவரை இருக்கும்".

ஹஜ்ரத் அலி ரலியல்லாஹு அன்ஹு கூறியதாக நாஃபிஃபின் ஜுபைர் ரலியல்லாஹு அன்ஹு கூறுகிறார்கள். "பெருமானாரின் சிரம் பெரியதாக, கம்பீரமாக இருக்கும். தாடி நீண்டிருக்கும்".

ஹிந்த் பின் அபீஹாலா ரலியல்லாஹு அன்ஹு கூறுகிறார்கள். "நாயகத்தின் தாடி கருமையானது".

சஃத்பின் அபீவக்காஸ் ரலியல்லாஹு அன்ஹு கூறுகிறார்கள். "தாடி அழகாகவும், நன்கு கருப்பாகவுமிருக்கும்".

அம்ர் பின் ஷுஐப் ரலியல்லாஹு அன்ஹு கூறுகிறார்கள். "பெருமானார் (தாடியை சீர் செய்யும்போது) நீளம், அகலம் இரண்டையும் சமமாக வெட்டி சீர்செய்வார்கள்".

அனஸ் ரலியல்லாஹு அன்ஹு கூறுகிறார்கள். "நாயகத்தின் தாடி இங்கும் அங்கும் (நீளமும், அகலமும்) நிரப்பமாக இருக்கும்".

## பெருமானாரின் புனித சிரசின் முடிகள்

நாயகத்தின் தலை முடிகள் மிக அழகாக கருமையாக மிக கெட்டியாக முரட்டாகவுமில்லாமல், மிக மென்மையாகவுமில்லாமல் நடுநிலையாக இருக்கும்.

ஹஜ்ரத் அனஸ் ரலியல்லாஹு அன்ஹு கூறுகிறார்கள். "பெருமானார் தலைக்கு அதிகம் எண்ணை தேய்ப்பார்கள். தாடியை சீவுவார்கள். தலை எண்ணை தலைப்பாகையில் ஒட்டாதிருக்க தலையில் ஒரு துணியை போட்டுத் தலைப்பாகை கட்டுவார்கள்".

சஃத் பின் அபீவக்காஸ் ரலியல்லாஹு அன்ஹு கூறுகிறார்கள். "பெருமானாரின் தலை, தாடி முடிகள் நன்கு கருமையாக இருக்கும். அபூதர்சஃபாவின் ரிவாயத்தை இப்னு அசாகிர் கூறுகிறார்கள். பெருமானாரின் தலைமுடி நல்ல கருமை. ஹஜ்ரத் அலி பின் அபூதாலிப் ரலியல்லாஹு அன்ஹு கூறுகிறார்கள். பெருமானாரின் திருமுடிகள் அழகாயிருக்கும். பெருமானாரின் தலைமுடிகள் காதுகள் வரை இருந்ததாக உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களும் காதுகளுக்கும், புஜங்களுக்கும் நடுவில் இருந்ததாகவும் அன்னை

ஆயிஷா ரலியல்லாஹு அன்ஹா அவர்களும் கூறியுள்ளார்கள்".

அதாவது எந்தெந்த சஹாபிகள் எந்நிலையில் அதிகம் கண்டார்களோ அதைக் கூறியுள்ளனர். ஆக பெருமானாரின் புனித சிரசின் முடிகள் மேற்கண்ட பல நிலைகளில் இருந்துள்ளது.

## புனித முடிப் பங்கீடு

ان رسول اللہ صلی اللہ علیہ وسلم اتی منی فاتی الجمرۃ فرماھا
ثم اتی منزلہ بمنی ونحر ثم قال للحلاق خذ واشار الی جانبہ
الایمن ثم الایسر ثم جعل یعطیہ الناس۔

(ص ۴۲۱ صحیح مسلم جلد اول۔ کتب خانہ رشیدیہ دہلی).

ஹஜ்ரத் அனஸ் இப்னு மாலிக் ரலியல்லாஹு அன்ஹு கூறுகிறார்கள். பெருமானார் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அன்னவர்கள் மினாவிற்கு வந்து, ஜமராவில் ஷைத்தானுக்கு கல் எறிந்துவிட்டு பின் மினாவிலுள்ள தமது கூடாரத்திற்கு வந்து குர்பானி கொடுத்துவிட்டு முடி மழிப்பவரை அழைத்து தமது (தலையின்) வலப்புறத்தில் சைக்கினை செய்து (அங்கிருந்து ஆரம்பிக்குமாறு) கூறினர். பின்பு இடதை சுட்டிக்காட்டினர். பின்பு அப்புனித முடிகளை மக்களுக்குப் பங்கிட்டார்கள். (முஸ்லிம், பக்-421 பாகம்-1)

لما رمی رسول اللہ صلی اللہ تعالی علیہ وسلم الجمرۃ ونحر
نسکہ وحلق ناول الحالق شقہ الایمن فحلقہ ثم دعا ابا طلحۃ
الانصاری فاعطاہ ایاہ۔ ثم ناولہ الشق الایسر فقال احلق
فحلقہ فاعطاہ ابا طلحۃ فقال قسمہ بین الناس. (ص ۴۲۱ صحیح مسلم جلد اول)

ஹஜ்ரத் அனஸ் இப்னு மாலிக் ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் வேறொரு அறிவிப்பில் காருண்ய நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் ஜம்ராவில் (ஷைத்தானுக்கு) கல் எறிந்துவிட்டு தலைமுடிகளை களைந்தார்கள். முதலில் தனது வலப்புறத்தில் மழிக்கும்படி நாவிதருக்குச் சொல்ல அவர் மழித்ததும் அபூதல்ஹா அன்சாரி அவர்களை அழைத்து அம்முடிகளை கொடுத்தார்கள். பின்பு இடப்புறம் மழிக்கக்கூறவே அவர் மழித்ததும் அதையும் ஹஜ்ரத் அபூதல்ஹா அன்சாரி அவர்களிடம் தந்து மக்களுக்கு அப்புனித முடிகளை பங்கீடுமாறு கூறினார்கள். (முஸ்லிம், பக்-431 பாகம்-1)

ஹதீஸ் நூல் முஸ்லிம் ஷரீஃபின் விரவுரையாளர் இமாம் நவவி அபூ ஜக்கரிய்யா முஹ்யித்தீன் யஹ்யா பின் ஷரஃப்

ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் மேற்கண்ட ஹதீஸின் பயன்களைக் கூறும்போது

ومنها التبرك بشعره صلى الله عليه وسلم واقتناءه للتبرك۔
(حاشیہ حوالہ مذکورہ)

"இந்த ஹதீஸின் மூலம் நபிநாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் எம்பிரானின் புனித முடிகளால் பரக்கத் உண்டுமென்பதும் மேலும் பரக்கத்திற்காக அதனைப் பாதுகாப்பது கூடும் என்பதும் தெரிய வருகிறது என்கிறார்கள்".

பின்பு இமாம் நவவி ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் எழுதுகிறார்கள். மேற்கண்ட ஹதீஸில் வரும் நாவிதர் யார் என்பதில் கருத்து வேறுபாடு இருப்பினும் பெரும்பாலும் அவர்கள் மஃமர் பின் அப்துல்லாஹ் அதவி ரலியல்லாஹு அன்ஹு என்றே கூறப்படுகிறது. இதே ஹதீஸ் கிட்டத்தட்ட அதே போன்று புஹாரி, திர்மிதியிலும் இடம் பெறுகிறது. மேலும் நாயகமவர்கள் அப்புனித முடியை அபூதல்ஹா ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் மனைவியும் அனஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் தாயருமான உம்மு சுலைம் ரலியல்லாஹு அன்ஹா அவர்களுக்கும் தரும்படி அனஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்களுக்கு உத்திரவிட்டுள்ளதாகவும் உள்ளது.

لما حلق رسول الله صلى الله تعالى عليه وسلم رأسه بمنى
اخذ شق رأسه الايمن بيده - فلما فرغ ناولني - فقال: يا انس
انطلق بهذا الى ام سليم - فلما رأى الناس ما خصه به تنافسوا
فى الشق الاخر هذا ياخذ الشئ - وهذا ياخذ الشئ -
(مسند امام احمد بن حنبل)

நாயகம் முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் மினாவில் தலைமுடி இறக்கியபோது தமது வலப்புற முடிகளை தமது கைகளாலேயே எடுத்து அனஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்களை அழைத்து இதை உமது தாயார் உம்முசுலைம் ரலியல்லாஹு அன்ஹா அவர்களிடம் போய் கொடுக்குமாறு கூற, விஷேசமாக அனஸ் ரலியல்லாஹு அன்ஹு குடும்பத்தை கவனிப்பதை பார்த்துவிட்டு அவர்கள் மற்றொரு பகுதி முடிகளைப் பெற ஒருவொருக்கொருவர் போட்டிபோட்டுக் கொண்டு வந்து அங்குமிங்கும் எடுக்கலாயினர். (அஹ்மத்)

ارسلني اهلي الى ام سلمة بقدح من ماء فجاءت بجلجل
من فضة فيه شعر من شعر النبي صلى الله عليه وسلم وكان
اذا اصاب الانسان عين او شئ بعث بها مخضبة - قال: فاطلعت
فى الجلجل فرأيت شعرات حمراء - (رواه البخارى فى كتاب اللباس)

உஸ்மான் பின் அப்துல்லா ரலியல்லாஹு அன்ஹு கூறுகிறார்கள். "ஒரு பாத்திரத்தில் தண்ணீரை தந்து என்னை உம்முல்முமினீன் உம்முசல்மா ரலியல்லாஹு அன்ஹா அவர்களிடம் என் குடும்பத்தார் அனுப்பினர். அவர்கள் ஒரு கண்ணாடியில் நாயகத்தின் திருமுடிகளில் ஒன்றை வைத்திருந்தார்கள். யாருக்கேனும் திருஷ்டியோ, நோயோ ஏற்பட்டால் அதில் நீரூற்றி அம்முடியால் அலசி அந்நீரைக் குடிப்பாட்டுவார்கள். நோய் தீர்ந்துவிடும்". (புஹாரி கிதாபுல் லிபாஸ்)

وكانت فى قلنسوة خالد بن الوليد شعرات من شعره صلى الله
عليه وسلم. فسقطت قلنسوته فى بعض حروبه فشد عليها
شدة انكر عليه اصحاب النبى صلى الله عليه وسلم كثرة من قتل
فيها. فقال لم افعلها بسبب القلنسوة. بل لما تضمنته من
شعره صلى الله عليه وسلم لئلا اسلب بركتها وتقع فى ايدى
المشركين. (ص ٤٤ - الجزء الثانى - الشفاء بتعريف حقوق المصطفى - مطبع اصح المطابع بمبئى)

ஹஜ்ரத் காலித்பின் வலீத் ரலியல்லாஹு அன்ஹு அவர்களைப் பற்றி காழீ அபுல் ஃபழ்ல் இயாழ் பின் மூஸா மாலிக் ரஹ்மத்துல்லாஹி அலைஹி எழுதுகிறார்கள். பெருமானாரின் புனித முடிகளில் சில காலித் பின் வலீத் ரலியல்லாஹு அன்ஹுவின் தொப்பியிலிருந்தது. ஒரு போரில் தொப்பி கீழே விழுந்துவிட்டது. உக்கிரமாக போர் நடந்துகொண்டிருந்த நிலையில் அதில் பல சஹாபாக்கள் ஷஹீதாகிக் கொண்டிருந்த நிலையிலும் அத் தொப்பியை எடுப்பதில் தீவிரமாக இருக்கக் கண்ட சஹாபாக்கள் ஏன் இப்படி நடக்கிறீர் என வருத்தப்பட்டார்கள். அதற்கவர்கள் " நான் தொப்பிக்காக அக்கறை காட்டவில்லை. அதிலுள்ள பெருமானாரின் திருமுடிக்களுக்காகத்தான். அதன் பரகத்தை நான் இழந்திடக்கூடாதெனவும், அது முஷ்ரிக்குகளின் கையில் கிடைத்து விடக்கூடாது என்பதற்காகவும் தான்" என்று பதிலளித்தார்கள்.

அவ்வாறே யர்மூக் போரில் அவர்களது தொப்பி தொலைந்தே போய்விட மிக சிரமப்பட்டு தேடி எடுத்தனர். மக்கள் கேட்டதற்கு காலித் பின் வலீத் ரலியல்லாஹு அன்ஹு கூறினார்கள். எம்பெருமானாரின் சிரசு முடிகள் ஒரு உம்ராவில் மழிக்கப்பட்ட போது நாங்கள் போட்டிபோட்டுக்கொண்டு எடுத்தோம். அதை நான் என் தொப்பியில்வைத்து தைத்துக் கொண்டேன். அத்தொப்பியுடன் நான் எப்போருக்கு சென்றாலும் அதன் பரக்கத்தால் வெற்றி கிட்டியது. (தர்ஜுமா காலித் பின் வலீத்)

ஹஜ்ரத் அனஸ் ரலியல்லாஹு அன்ஹு பற்றி சாபித் பன்னானீ ரலியல்லாஹு அன்ஹு கூறுவதாவது. ''நாயகத்தின் திருமுடியைக்காட்டி இதை என் மவத்திற்குப்பின் என் நாவிற்கடியில் வைத்துவிடுங்கள் என்று கூற நானும் அவ்வாறே செய்தேன். அவ்வாறோ அவர்கள் அடக்கப்பட்டார்கள்".

அமீர் முஆவியா ரலியல்லாஹு அன்ஹு பற்றி அல்லாமா ஜலாலுத்தீன் சுயூத்தி கூறுகிறார்கள். "அமீர் முஆவியா ரலியல்லாஹு அன்ஹு அவர்களிடமிருந்த பெருமானாரின் திருமுடியை அவர்கள் மரணித்தபின் கண்களில், வாயில் வைத்து அடக்கம் செய்யும்படி வசிய்யத் செய்ய அவ்வாறே செய்யப்பட்டது".

فحدثنيه عبيدة السلمانى - يريد هذا الحديث: فقال
لان يكون عندى شعرة منه احب الى من كل بيضاء وصفراء على
وجه الارض وفى بطنها - (رواه الامام محمد بن حنبل فى مسنده)

இத்தலைப்பின் கீழ் ஹதீஸ்களைப்பற்றி இமாம் முஹம்மத் பின் சீரின் தாபிஈ ரலியல்லாஹு அன்ஹு கூறுகிறார்கள். பெருமானாரின் ஒற்றை முடி இருப்பது பூமியின் மேலேயும், உள்ளேயும் உள்ள எல்லா செல்வங்களையும் விட எனக்கு மிக விருப்பமானது என ஹஜ்ரத் உபைதா ரலியல்லாஹு அன்ஹு கூறியிருக்கிறார்கள். (முஸ்னது இமாம் முஹம்மத் பின் ஹம்பல்)

ஹஜ்ரத் அபூசலமா ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகின்றார்கள். ஹஜ்ரத் முஹம்மத் பின் அப்துல்லா பின் யஜீத் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் தம் தந்தை அப்துல்லாஹ் ரலியல்லாஹு அன்ஹு மினாவில் பெருமானாரின் திருமுடிப் பங்கீட்டின் போது இருந்து அவர்களும் சில திருமுடிகளைப் பெற்றுக் கொண்டார்கள். மேலும் அத்திருமுடியை மருதாணியிட்டு, நறுமணமிட்டு வைத்திருந்தார்கள்.

(துபகாத் இப்னு சயீத், பாகம்-1)

## திருநபியின் திருமுடியின் அற்புதங்கள்

ஹஜ்ரத் ஷாஹ் வலியுல்லாஹ் முஹத்திஸ் தெஹ்லவி ரஹ்மத்துல்லாஹி அலைஹி தமது தந்தை ஷாஹ் அப்துர்ரஹீம் முஹத்திஸ் தெஹ்லவி ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களுக்கு பிணி ஏற்பட்ட போது நடந்த நிகழ்ச்சியைக் குறிப்பிடுகிறார்கள்.

ஷாஹ் அப்துர்ரஹீம் முஹத்திஸ் தெஹ்லவி ரஹ்மத்துல்லாஹி அலைஹி கடுமையான காய்ச்சலால், இனி பிழைக்கவே முடியாதெனும் நிலையில் இருந்தார்கள். அப்போது அவர்களது தந்தை ஹஜ்ரத் அப்துல் அஜீஸ் முஹத்திஸ் தெஹ்லவி ரஹ்மத்துல்லாஹி அலைஹி வந்து "பெருமானார் உன்னை சந்திக்க வருகிறார்கள். நீ அவர்களை நோக்கி கால்களை நீட்டாதவாறு இருந்துகொள்'' எனக் கூறிச் சென்றிட அவர்கள் அருகிலிருந்தவர்களிடம் தமது படுக்கையை சீர்செய்யச் சொல்லி பின்பு சீராக இருந்து கொண்டார்கள். சொன்னதுபோலவே கனவில் கண்மணி நாயகம் முஹம்மத் முஸ்தஃபா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் வந்தார்கள். தங்களது தாடி அவர்களது தலையில் படும்படியும், மேலங்கி கண்களை ஒட்டியுமிருக்கும்படி நெருங்கி "எப்படி இருக்கிறாய் என் மகனே?" என்று கேட்டார்கள். பின்பு அவர்கள் பெருமானாரின் நீண்ட நாட்களாக தங்களின் திருமுடி மீது ஆவல் எனக் கூற நபிகளார் தமது தாடியிலிருந்து இரு முடிகளை தமது திருக்கரத்தால் எடுத்து வழங்க இது கனவில் மட்டுமே என் கையில் இருக்குமா? விழித்தபின்புமிருக்குமா? எனக் கேட்க விழித்தபின்பும் இருக்கும் என்றதோடு நீர் நலமாக, நீண்டஆயுளுடன் இருப்பாய் என்ற சுபசோபனம் கூறினார்கள். பின்பு அவர்கள் விழித்துப்பார்த்தபோது அம்முடிகள் கையில் இல்லை. அவர்கள் மிக சஞ்சலமடைந்து அல்லாஹ்விடம் முறையிட பெருமானார் மீண்டும் தோன்றி அவை ஓரிடத்தில் இருப்பதாக கூற அவ்விடத்திலிருந்து எடுத்து பத்திரப்படுத்திக்கொண்டார்கள். அக்கணமே அவர்கள் பூரண சுகம் பெற்றுவிட்டார்கள்.

மேலும் அத்திருமுடிகள் சேர்ந்து சாதாரண முடிகளைப் போல் இருக்கும். தரூத் ஓதத் துவங்கினால் இரண்டும் தனித்தனியாக எழுந்து நிற்கும்.

## மேகம் நிழலிட்டது.....

ஒரு தடவை சிலபேர் அதை பொய். அது உண்மையென்றால் நிரூபியுங்கள் என்று வாதிட்டார்கள். ஆனால் அவர்களை ஹஜ்ரத் ஷாஹ் அப்துர்ரஹீம் முஹத்திஸ் ரஹ்மத்துல்லாஹி அலைஹி பொருட்படுத்தவில்லை. அவர்களது பேச்சு தீவிரம் அடைந்ததும் அத்திருமுடிகளை எடுத்து வெயிலில் காட்ட அவ்வெயிற்காலத்தில், மேகமே இல்லாத நிலையினும் திடீரென ஒரு மேகம் வந்து அத்திருமுடிகளை வெயிற்படாமல் மேகங்கள் நிழலிட்டது. ஏனெனில் பெருமானாரின் அக்காலத்திலும் அவர்களின் மேல் வெயில் படாது மேகங்கள் நிழலிட்டது. அவ்வாறே அன்னாரின் புனிதத்திருமுடி

என்பதால் அவைகளுக்கும் மேகம் நிழலிட்டது. இதைக்கண்டதும் மூவரில் ஒருவர் தவ்பா செய்துவிட்டார். இன்னொருவர் இம்மேகம் இயற்கையானதென்றார். பின்பு மீண்டும் அத்திருமுடியை வெளியில் எடுக்க மீண்டும் மேகம் நிழலிட்டதைக் கண்டு இரண்டாமவரும் தவ்பா செய்தார். மூன்றாமவர் ஏற்கவில்லை. பின்பு மீண்டும் மூன்றாம் முறை வெளியில் எடுக்க, மேகம் நிழலிட்டதைக் கண்டு மூன்றாமவரும் தவ்பா செய்து விட்டார்.

இன்னொரு முறை அத்திருமுடிகளை ஜியாரத் செய்ய அப்புனித முடிகளுள்ள பெட்டி வெளியில் கொண்டு வரப்பட்ட போது ஒரு பெருங்கூட்டமே கூடிவிட்டது. ஆனால் அப்பெட்டியின் தாழ்பாளை திறக்க முடியவில்லை. அக்கூட்டத்தில் யாரோ ஒருவர் அசுத்தமான நிலையில் இருப்பதை உணர்ந்த ஹஜ்ரத் அவர்கள் எல்லோரும் மீண்டும் ஒளு செய்து கொள்ளுங்கள் என சூசகமாகக் கூற எல்லோரும் ஒளு செய்தபின் அப்பெட்டி திறந்தது. (அன் ஃபாசுல் ஆரிஃபின்)

## தமிழகத்தில் பெருமானாரின் புனிதச் சின்னங்கள்

தஞ்சை:

1. தஞ்சை நகரில் வாழும் சையது வம்சத்தின் சக்காப் பரம்பரையைச் சார்ந்த புனிதர்களிடம் பரம்பரை பரம்பரையாக பெருமானாரின் புனித திருமுடி பாதுகாக்கப்படுகிறது. ஆசார் தைக்கால் எனப்படும் ஓர் அழகிய கட்டிடத்தையே மராட்டிய மன்னர்கள் இதற்கென வழங்கியுள்ளார்கள். ஆசார் தைக்கால், கொண்டிராஜபாளையம், தஞ்சாவூர் என்ற முகவரியில் ரபியுல் அவ்வல் பிறை 12 அன்று மக்களின் ஜியாரத்திற்காக வேண்டி வைக்கப்படுகிறது.

2. தஞ்சை வடக்கு ராஜ வீதியில் எண்.119, சௌக்கார் குடும்பத்து வம்சத்தில் இத்திருமுடி பாதுகாக்கப்பட்டு வருகிறது.

மதுரை:

ஆலி ஜனாப் அக்பர் உமர்சேட் மஹாத்மா ஹாஸ்பிடல் அருகில் கே.கே. நகர், மதுரை. என்ற முகவரியில் நபிகளாரின் திருமுடி ரபியுல் அவ்வல் பிறை 12ல் ஜியாரத்திற்காக வைக்கப்படுகிறது.

சென்னை:

1. நவாபுகள் ஆண்ட காலத்திலிருந்து பாரம்பரிய காஜிமார்களாகிய இஸ்லாமிய மார்க்க சட்ட நடைமுறைகளை செயல்படுத்திவரும்

தமிழக அரசின் தலைமை காஜியார் அவர்களின் திவான்பாக் தோட்டத்தில் பெருமானார் மற்றும் பல வலிமார்களின் திருமுடிகள் அந்தந்த மாதத்தில் ஜியாரத்திற்காக வேண்டி வைக்கப்படுகிறது.

2. பெருமானரின் புனித மேலங்கி ரபியுல்லவ்வல் பிறை 12 அன்று பல்லாவரம் மலையில் ஜியாரத்திற்காகவேண்டி வைக்கப்படுகிறது.

3. திருவல்லிக்கேணி பகுதியில் வாழும் சாதாத்மார்களிடத்திலும் இந்த புனிதத் திருமுடி பாதுகாக்கப்பட்டு வருகிறது.

4. செய்யது சிராஜ் அஹமது காதிரி, எண்.14, ஐ பிளாக், டர்ன் புல்ஸ் ரோடு, நந்தனம், சென்னை-35. செல்: 9566182877

வேலூர்:

ஹஜ்ரத் மகான் லதீபியா அரபிக்கல்லூரியிலும் திருநபியின் திருமுடியும், பல வலிமார்களின் திருமுடிகளும் அந்தந்த மாதத்தில் ஜியாராத்திற்காக வைக்கப்படுகிறது. இதனை மௌலானா மௌலவி உஸ்மான் காதிரி எம்.ஏ.பி.எச்.டி., அவர்கள் சிறந்த முறையில் பாதுகாத்து வருகிறார்கள்.

சேலம்:

அம்மாப்பாளையம், மஸாயிஹ் மஸ்ஜித் என்ற இடத்தில் பிறை 12 ரபிய்யுல் அவ்வல் அன்று திருநபியின் திருமுடி தரிசனத்திற்காக வைக்கப்படுகிறது.

திருவாரூர்:

134, பள்ளிவாசல் தெரு, தமிழ்நாடு மெர்கண்டைல் பேங்க் அருகில், விஜயபுரம், திருவாரூர்.

குறிப்பு:

தமிழகத்தின் வேறு பகுதிகளில் இருப்பது தாங்களுக்குத் தெரிந்தால் எங்களுக்கு தகவல் கொடுத்தால் இன்ஷா அல்லாஹ் அடுத்த பதிப்பில் சேர்த்துக் கொள்கிறோம். -தர்ஹா வெளியீட்டகம்.

# எமது பிற வெளியீடுகள்...!

1. சாஹூப் வலி நினைவு மலர் - ரூ. 60/-
2. ஒரு மாவீரரின் சத்தியப் போராட்டம் - கர்பலா - - ரூ. 45/-
3. தஞ்சை தர்காக்களும், கர்பலா சின்னங்களும் - ரூ. 30/-
4. கப்ருகளும் அதற்குரிய சட்டங்களும் - ரூ. 25/-
5. புனித தரீகாக்களில் வஹ்ஹாபிய விஷக் கிருமிகள் - ரூ. 25/-
6. ஹஜ்ரத் பூ அலீ ஷா கலந்தர் - ரூ. 20/-
7. இஸ்லாத்தில் புனித கொடிகள் - ரூ. 20/-
8. வலிமார்களின்அற்புதங்களில் வஹ்ஹாபிகளுக்கு மறுப்புரை - ரூ. 15/-
9. முரீது விளக்கம் - ரூ. 15/-
10. பதிநான்காம் நூற்றாண்டின் முஜத்தித் ஆலா ஹஜ்ரத் - ரூ. 35/-
11. பாத்திஹா ஓதுவோம் முன்னோர் வழி நடப்பபோம் - ரூ. 10/-
12. திருமறையின் தெளிவுரை - ரூ. 20/-
13. ஹுஸாமுல் ஹரமைன் (தமிழில்) - ரூ. 30/-
14. தர்கா ஜன்த்ரி - ரூ. 10/-
15. தர்கா மாத இதழ் ஆண்டு சந்தா - ரூ. 100/-

**Published By :**
Dargah Publishers
74/176-A, First Floor, Gandhiji Road,
Opp. Erattai Mastan Dargah, Thanjavur - 613001
Phone : 04362 - 270786